# வேலையை இழந்தது என்னுடைய தவறு என்றார்கள்!

நானாகத்தான் வேலையைப
போக்கிக் கொண்டேன்
என்றார்கள் வீட்டில் எல்லோரும்
எனக்கு உடலில் சோர்வு,
மனத்தில் தெம்பில்லை என்றால்
என் குற்றமா என்ன!



ஹார்லிக்ஸ் பருகும்படி
என் மனைவி சொன்னாள்
இழந்த சக்தியையும்
தெம்பையும் மீண்டும்
பெற அதுதான் வழி
என்று கூறினாள்.






அவன் சொன்னது
முற்றிலும் உண்மை!
சில வாரங்களிலேயே
என்னுடைய அசதி போய்
விட்டது. என்னுடைய புது
வேலையில் உற்சாகத்துடன்
உழைப்பதற்கான சக்தியும்
வந்துள்ளது!




## ஹார்லிக்ஸ்

அதிக சக்தி அளிக்கிறது!

பராபவ
ஆனி - 5
ஜூன் - 19

# கல்கி

### நினைவுத் திரையில் . . .

நாட்டில் தொழில் வளம் பெருகி உணவு உற்பத்தி அதிகமாகிச் சுபிட்சம் நிலைபெற்றால், பிறகு பொது உடைமைத் தத்துவங்களை அமுலுக்குக் கொண்டு வருவதற்கு வேண்டிய வசதியும் அவகாசமும் இருக்கும்.

முதலிலேயே தொழில்களையும் நிலங்களையும் பொதுவுடைமையாக்குவது பற்றிப் பேசினால் நுனி மரத்திலிருந்து அடிமரத்தை வெட்டுவதாக முடியும்.

— கல்கி, ஏப்ரல் 3, 1949 தலையங்கம்

### பொருளடக்கம்

நல்ல சமயத்திலேயே
நான் வெளியேறிவிட்டேன்
என்று சொல்லவில்லையா?

ரூபாயின் மதிப்புக் குறைக்கப்பட்டது

PK

நாட்டோவில் சேர்ந்து
விட்டாரா என்ன?

என் கோசிஜின்
புத்திமதியைக்
கேட்கவில்லை?

அரசியல்
அவிவேகம்

சுதந்திரக்
கட்சியில்
சேர்ந்துவிட்டார்

மதிப்புக்குறைந்த
ரூபாய்

PK



மலர் 25, ❁ இதழ் 47



# தேசீய சர்க்கார் தேவை!

**ராஜாஜி**

கடந்த பதினைந்தாண்டுகளில் நடைபெற்ற நிருவாகத் தவறுகளின் தவிர்க்க முடியாத விளைவாகவே ரூபாயின் மதிப்பைக் குறைக்க நேர்ந்திருக்கிறது. உண்மையிலேயே நமது ரூபாயின் மதிப்புக் குறைந்துவிட்டபின் அதை மூடி மறைக்கப் பார்ப்பதால் நன்மையில்லை. நாம் இன்ஸால்வெண்ட் கொடுக்கும் நிலைமையிலிருப்பது பிரத்தியட்ச உண்மை. இதை ஒப்புக் கொள்வதே தற்போது நமது ரூபாயின் வெளிநாட்டு மதிப்பைக் குறைத்துக் கொள்ளும் நடவடிக்கை.

நீண்ட காலம் முறையற்ற ஆட்சி நடப்பதற்கு அனுமதித்து விட்டவர்களுக்கு, இப்போது நாணய மதிப்புக் குறைக்கப்பட்டு விட்டதே என்று விசனிப்பதற்கு உரிமையில்லை. இந்த நடவடிக்கையினால் விளையும் துன்பங்களைத் தாங்கிக் கொள்ள வேண்டியதுதான். இனியும் நாணய மதிப்புக் குறையாமல் காக்க வழி என்ன என்பதே கேள்வி. இது வரையில் நடந்த ஊழல் நிர்வாகம் 1967க்குப் பின்னும் தொடராமலிருக்கச் செய்வதே அதற்கு உபாயம்.

இப்போது ஏன் மதிப்பைக் குறைத்தார்கள் என்பது கேள்வி. இந்நாட்டின் தொழில் உற்பத்தியும், விவசாயமும் வெளிநாட்டு உதவியைச் சார்ந்தே உள்ளன. உடனடியாக இவ்வுதவி கிட்ட வேண்டிய தீவிரமான கட்டத்தில் உதவி கிடைக்குமா என்பது மிகவும் சந்தேகமாகி விட்டது. இந்திய நாணயத்தின் மதிப்பைக் குறைத்துக் கொண்டாலொழிய அந்நியர்களின் உதவி நமக்குக் கிட்டாது என்று யோசனை அளிக்கப்பட்டது. இந்திய சர்க்காரும் நிலைமையின் தீவிரத்தை உணர்ந்தது. தனது கொள்கைகளால் கடந்த பல ஆண்டுகளாக ஏற்பட்டுள்ள நிலைமைக்குப் பொறுப்பேற்றுத் தானாக வேண்டும், வேறு வழியில்லை என்று கருதி ரூபாயின் மதிப்பைக் குறைத்து விட்டது. ஆனால் இந்த நடவடிக்கை பொதுத் தேர்தல்களில் காங்கிரஸின் வெற்றி வாய்ப்புக்களைப் பெரிதாகப் பாதிக்கும் என்பதில் சந்தேகமில்லை. தேர்தல் வெற்றி முக்கியமா, அந்நிய உதவி கிட்டச் செய்வது முக்கியமா என்ற சங்கடமான நிலை பிரதமருக்கு ஏற்பட்டது. கடைசியில் ரூபாய் மதிப்பைக் குறைக்கும் நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. கட்சியைவிடத் தேசமே தமக்கு முக்கியமானது என்பதைப் பிரதமர் தெளிவாகக் காட்டி விட்டார். அவர் வெகு விரைவில் பெருமைக்குரியவராக வளர்ந்து விட்டார். ஆண்டவன் அவருக்கு அருள்வானாக!

ரூபாய் மதிப்பைக் குறைத்துவிட்டதால், தேர்தல் வெற்றிதான் சகலமும் எனக் கருதும் காங்கிரஸின் ஒரு கோஷ்டியார் — இவர்களே மெஜாரிட்டியாகவும் இருக்கக்கூடும் — ஒரேயடியாக எரிச்சல் அடைந்திருக்கிறார்கள். இத்தகைய பிளவு ஏற்பட்டபின் காங்கிரஸ் மந்திரி சபை அதற்குரிய தேசியப் பொறுப்புக்களைச் சரியாக ஆற்றுவது மிகச் சந்தேகம்.

இன்றைய நிதி நிலைமை என்ன? மேற்கத்திய வல்லரசுகளுடன் நம்பகமான ராணுவ ஒப்பந்தம் செய்து கொள்ள வழி திறந்திருந்த போதிலும், அவ்விதம் செய்யாமல் தடஸ்தக் கொள்கையை விடாப் பிடியாகப் பிடித்துவருவதால் நம்முடைய ராணுவச் செலவு பயங்கரமான வேகத்தில் உயர்ந்து வருகிறது. தடஸ்தக்கொள்கை என்ற மூடுபனி விலகாத வரையில் நமது பாதுகாப்பு இப்படியே ஊசலாட வேண்டியதுதான். நமது அந்நியக் கடன்கள் (ரூபாயின் பழைய மதிப்புப்படியே) மூவாயிரம் கோடிக்கும் அதிகம். நான்காம் திட்டகாலத்தில் நாம் அந்நியருக்குத் திருப்பித் தர வேண்டிய கடன்களோ (பழைய மதிப்புப்படி) 1500 கோடி ரூபாய்.

பத்து வருஷங்களுக்குள் நேரடி வரிகள் மும்மடங்காகவும், மறைமுக வரிகள் நான்கு மடங்காகவும் உயர்ந்துள்ளன. இந்த உண்மை நிலைமையை உணர்ந்து தேசம் தனது இரண்டு கால்களையும் ஊன்றி நிற்கும் படியாகச் செய்ய வேண்டும். இல்லாவிடில் படுமோசம் ஆகும்.

இன்று மத்திய, மாகாண வரிகளின் வருடாந்திரக் கூட்டுத் தொகை 5340 கோடி ரூபாய். அதாவது இதுவே அரசாங்கங்களின் செலவு. ரூபாயின் மதிப்பைக் குறைத்தபின் இது இன்னும் கணிசமாக உயரும். வரித் தொகை பெருகும் போது விலைகள் மட்டும் எப்படி அதே மட்டத்தில் இருக்கும்? இன்றைய நடவடிக்கையால் விலைவாசிகள் பாதிக்கப்பட மாட்டா என்று சொல்வது வெறும் புரளிதான். கடைத் தெருவுக்குப் போனால் உண்மை நிலை தெரியும்.

பணத்தின் மதிப்புக் குறைவினால் விலைவாசிகள் உயர்ந்துவிடக் கூடாது எனக் கருதிப் பிரம்மாண்டமான அளவில் ஸ்டோர்கள் நடத்தச் சர்க்கார் உத்தேசித்திருப்பதாகத் தெரிகிறது. பண்டங்கள் வாங்கிச் சேகரித்து வைத்து, வெளிச் சந்தை விலை ஏறாத வகையில் அவற்றுக்கு விலை வைத்து விற்கப் போவதாகச் சொல்லப்படுகிறது. இவ்வளவையும் நிர்வகிப்பது எப்படி என்பதுதான் சிக்கலான பிரச்னை. தகுதியுள்ள சிப்பந்திகள், அவர்களின் நீடித்த நேர்மை, பண்டம் சேகரிக்கக் கிடங்குகள், கடை வசதி, கையிருப்புக் கணக்குகள், இவை குறித்த பிரச்னைகள் யாவும் வியாபாரிகளுக்கு நன்கு தெரிந்த விஷயங்கள்; இவை சர்க்காருக்குத் தெரியாத விஷயங்கள். இதன் விளைவாகப் பெருத்த நஷ்டங்கள் ஏற்படும். மக்களின் குறைபாடுகள் பெருகும். முடிவில் வெளிச் சந்தையே தரத்தில் உயர்ந்த பண்டங்களைக் குறைந்த விலைக்குத் தருவதாகத் தெரிய வரும்.

ரூபாய் மதிப்பு மாறினாற் போல் ஆட்சி முறையில் உடனடியாக ஒரு புரட்சி ஏற்பட வேண்டும் என்பதே இந்தச் சந்தர்ப்பத்தின் தேவை. கட்சிச் சர்க்காருக்குப் பதில் தேசிய சர்க்கார் அமைந்தாக வேண்டும். ரூபாயின் மதிப்பைக் குறைத்தது குறித்தும், இந்தப் பயங்கரமான நடவடிக்கைக்கு அடுத்தபடியாக இனி என்ன செய்ய வேண்டும் என்பது குறித்தும் கருத்து வேற்றுமை கொண்டுள்ள மந்திரிசபைக்குப் பதிலாகத் தேசத்தில் உள்ள அறிஞர்களைக் கொண்ட கட்சிச் சார்பற்ற ஒரு மந்திரி சபை பொறுப்பெடுத்துக் கொள்ள வேண்டும். ரூபாயின் மதிப்பை மாற்றுவதற்கு எப்படித் தேர்தல்வரை காத்திருக்கவில்லையோ, அதே போல் மந்திரி சபையை மாற்றுவதிலும் தாமதம் செய்யாமல் உடனே நடவடிக்கை எடுக்க வேண்டும். இவை இரண்டும் ஒன்றையொன்று தொடரும் நடவடிக்கைகள். ஒன்றைச் செய்த கையோடு மற்றதையும் விரைவாகச் செய்தாக வேண்டும். ரூபாயின் மதிப்புக் குறைவு ஏற்பாட்டில் பக்தி இல்லாதவர்களிடமும், கோபம் கொண்டவர்களிடமும் நிர்வாகம் இருப்பது அபாயம்.

# திருவாரூர் மகாநாடு

கிழக்குத் தஞ்சை ஜில்லாவைச் சேர்ந்த சுதந்திரக் கட்சி அன்பர்கள் நமது பாராட்டுக்குரியவர்கள். அவர்கள் திருவாரூரில் 5-6-66 அன்று மிக வெற்றிகரமாக ஒரு மாபெரும் மகாநாடு நடத்தினார்கள்.

ஆட்சியாளரின் தவறான பொருளாதாரக் கருத்துக்களை, நாட்டுக்குத் தீங்கு விளைவிக்கும் ஆபத்தான நடவடிக்கைகளை, தவறான வரித் திட்டங்களை அரசியலிலும் நிர்வாகத்திலும் பெருந் தொழில்களிலும் விவசாயத்திலும் அநுபவப்பட்ட பல சுதந்திரக் கட்சித் தலைவர்கள் எடுத்துக் கூறிய போது, அம்மகாநாடு சுதந்திரக் கட்சியோர் நம் நாட்டு மக்களுக்காக நடத்திய இலவசப் பல்கலைக் கழகமாகவே தோன்றியது. காலை ஒன்பது மணியிலிருந்து இரவு எட்டு மணி வரை நடைபெற்ற மகாநாட்டை ஆயிரக்கணக்கான அம்மக்கள் ஆர்வத்துடன் கேட்டுத் தீர்மானங்களை நிறைவேற்றியதைப் பார்த்தபோது, தஞ்சை ஜில்லாவாசிகள் மனத்தில் ஓர் உறுதி செய்து கொண்டு விட்டார்கள் எனத் தெளிவாகியது!

சிறு மிராசுதார்களுக்காகவே அல்லும் பகலும் பாடுபட்டு வந்த காலஞ்சென்ற கி ரு ஷ் ண மூ ர் த் தி அய்யர் அவர்களின் திருவுருவப் படத்தைத் திறந்து வைத்த திரு சுயம்பிரகாசம் அவர்கள், நடைமுறையில் சர்க்கார் நமது விவசாயிகளைக் கசக்கிப் பிழிந்துவிட்டு, பத்திரிகைகள் மூ ல மா க அறிக்கைகள் விட்டு, விவசாயிகளுக்கு அநுகூலம் செய்வதாகப் பாசாங்கு செய்வதைப் பல உதாரணங்கள் மூலம் எடுத்துக் கூறினார்.

கோவை ஜி. கே. சுந்தரம் தலைமையில் நடந்த இம் மகாநாட்டில் திரு சா. கணேசன், திரு எஸ். எஸ். மாரிசாமி, திருச்சி டாக்டர் காளமேகம், திரு பெபின் பெர்னாண்டோ முதலிய பல தலைவர்களும் ஆர்வம் மிக்க சுதந்திரக் கட்சியைச் சேர்ந்த இளைஞர்களும் அருமையான சொற்பொழிவுகள் ஆற்றினார்கள்.

கடைசியாகப் பேசிய ராஜாஜி முக்கியமாக ஓர் எச்சரிக்கை விடுத்தார். தி. மு. க., சுதந்திரா, முஸ்லிம் லீக் ஆகிய கட்சிகளின் கூட்டணியை முறிக்கப் பஞ்சதந்திரத்தில் குறிப்பிடப்பட்டுள்ள அத்தனை தந்திரங்களையும் காங்கிரஸார் கையாள்கிறார்கள்; இந்த மோசடிக்கு மக்கள் ஏமாந்துவிடக்கூடாது என்று எச்சரிக்கை விடுத்தார்.

மகாநாட்டை நாகை வழக்கறிஞர் திரு வி. எஸ். ராமஸ்வாமி அய்யங்கார், ஜனாப் ஜமீலா, திரு வீரன் இளஞ்சிங்கம், ஜனாப் எம். ஷேக்தாவூத் போன்ற பல அன்பர்கள் முன்னின்று உழைத்து வெற்றிகரமாக நடத்தியிருக்கிறார்கள். அவர்களது ஊக்கம், தஞ்சை ஜில்லாவில் நன்கு பரவிப் பயனளிக்கும். இது திண்ணம்.

★

ரூபாயின் மதிப்பைக் குறைப்பதால் இன்னின்ன நன்மைகள் ஏற்படும் என்று அதன் ஆதரவாளர்கள் கூறுகிறார்கள். இந்த நன்மைகள் மாயாஜாலத்தினால் விளைபவையல்ல. அவ்வாறு இருப்பின் வாழ்க்கையே ஓர் அற்புதமான மகிழ்ச்சியாக இருக்கும். ஏழை பணக்காரர் யாவரும் எளிய வாழ்க்கை வாழ்வதும், தேவைகளைக் குறைத்துக் கொண்டு சிக்கனமாக இருப்பதும், கஷ்டங்களைத் தாங்கி ஈடு கொடுப்பதுமே உண்மையில் நன்மை பயக்கக் கூடியன. இதோடு நேர்மை வேண்டும். நேர்மைக்காகவே நேர்மை என்றில்லாவிடினும் உலக வாழ்வுக்கு உகந்த அளவுக்காவது நேர்மை வேண்டும். ஹிரோ-ஹிடோ சக்கரவர்த்தியின் கீழ் ஜப்பான் மக்கள் இத்தகைய வாழ்வு வாழ்ந்துதான் தங்கள் ஏற்றுமதியையும் ராணுவ பலத்தையும் பெருக்கிக் கொண்டனர்.

★

உணவு, மற்றும் ஏழை மக்களுக்கு அத்தியாவசியமான இதர பண்டங்களின் விலை உயராது என்று உணவு மந்திரி அறிக்கை விட்டிருப்பதாகத் தெரிகிறது. படிப்பதற்கு இது ரம்மியமாகத்தான் இருக்




கிறது. ஆனால் காரியாம்சத்தில் நடக்கும் என்று நம்புவது சிரமம். உற்பத்தி செய்யும் ஒவ்வோர் அமைப்பிலுமுள்ள ஏராளமான மக்களின் கூட்டு உழைப்பினாலன்றிப் பண்டங்களைத் தயாரிக்க முடியாது. இவர்களுடைய வாழ்க்கைச் செலவு ரூபாயின் குறைந்த மதிப்புக்கேற்ப உயரத்தான் செய்யும். விலையும் இதனால் உயரும். அசாத்தியமான ஒன்றைப் பலவந்தத்தால் சாதித்து விட முடியாது. பண மதிப்புக் குறைவை ஆதரிக்கும் உணவு மந்திரியும் மற்றவர்களும் இப்போதிருப்பதைவிடப் பெரிதாகக் கருப்பு மார்க்கெட் விஸ்தரிக்க வேண்டுமென விரும்பவில்லை என்றே நம்புகிறேன்.

★

அந்நியத் தூதராலயங்களிலிருந்து கார்கள் வாங்கி அவற்றைப் பொறுக்கியெடுக்கப் பட்ட உள்நாட்டினருக்கு விற்றுச் சிறிய வியாபாரத்தில் நல்ல லாபம் கண்டு வந்தது அரசாங்க வர்த்தகக் கார்ப்பொரேஷன். இப்போது ரூபாயின் மதிப்புக் குறைந்து விட்டதால் தூதராலயங்கள் அதற்கேற்ற விகிதத்தில் அதிக விலை கேட்கின்றன.

ரூபாயின் மதிப்பைக் குறைத்து விட்டபடியால் நான்காவது திட்டத்தின் பணத் தேவை 21,500 கோடி ரூபாயிலிருந்து 25,000 கோடியாக உயர்ந்து விட்டது!

★

மூடி மறைக்கப்பட்ட திவாலா நிலையில் நமது தேசம் இல்லாவிடில், காங்கிரஸ் காரியக் கமிட்டி பெரிதுபடுத்திய 'பயிர்கள் இன்ஷுரன்ஸ்' மிகவும் யுக்தமான ஒரு திட்டமேயாகும். பருவ மழைகளையே நம்பி உழவு புரியும் நமது மக்களில் பெரும்பாலோருக்கு இத்திட்டத்தினால் நல்ல பயன் கிடைக்கும். பருவ மழை பெய்வதாலோ, பொய்த்துப் போவதாலோ ஏற்படக்கூடிய விளைவுகளைத் தேசம் முழுவதற்கும் சமமாக விநியோகிக்கும் திட்டமாக இது இருக்கும். எங்களில் பிறவியிலிருந்தே விவசாய மனப்பான்மை கொண்ட ஸ்ரீ கே. சந்தானம் போன்ற பலர் நீண்ட காலத்துக்கு முன்பே 'பயிர்கள் இன்ஷுரன்ஸ்' திட்டம் வேண்டுமென்று பேசியிருக்கிறோம். ஆனால் அப்போது இன்றுபோல் பெரும் செலவுகள் செய்வதற்குச் சர்க்கார் முன்வராததால், 'இது நல்ல யோசனையாயினும் நிதி நிலைமை இடம் தராது' என்று கூறி விட்டார்கள்.

ஆனால் இப்போது தேர்தல் ஆண்டு வந்து விட்டதல்லவா? இன்று பணம் என்பது சர்க்காருக்கு வெறும் கணித இலக்கமாகத்தான் இருக்கிறது. உடனே 'பயிர்கள் இன்ஷுரன்ஸ்' யோசனையைப் பிடித்துக் கொண்டிருக்கிறார்கள். ஒரு மிருகத்தின் மீது சவாரி செய்பவர் அதன் வாய்க்கருகே உணவுப் பொருளை நீட்டிப் பிடித்து வர, அதைக் கௌவுவதற்காக மிருகம் முன்னேறுவது போல், இப்போது வாக்காளர்களுக்குச் சில பட்சணங்களைக் காட்டிக் காங்கிரஸின் வழிக்குக் கொண்டு போகப் பார்க்கிறார்கள். அவற்றில் ஒன்று 'பயிர் இன்ஷுரன்ஸ்'. பொதுவில் பயிர் இன்ஷுரன்ஸின் பயனை அறிந்த போதிலும் நாட்டின் நிதி நிலைமையையும், காங்கிரஸ் ஆட்சியில் இத்திட்டம் எப்படி அமுலாகும் என்பதையும் எண்ணிப் பார்க்க வேண்டும்.

கஷ்டப்படும் விவசாயிகளுக்கு உதவித் தொகை விநியோகிக்க வேண்டியவர்கள் எப்படியெல்லாம் நடந்து கொள்கிறார்கள் என்பதை எண்ணும்போது இத்திட்டம் பெருத்த லஞ்ச ஊழலுக்கும், கையாடலுக்கும்தான் பிறப்பிடமாக இருக்கும் என்று தோன்றுகிறது. அதிகாரிகளும், அரசியல் ஏஜண்டுகளும் இதை எல்லாக் கட்டங்களிலும் தவறாகப் பயன்படுத்திக்கொள்ள முயலுவர். கிராமாதிகாரிகள், ரெவினியூ அதிகாரிகள், மாவட்ட நிருவாக இயந்திரச் சிப்பந்திகள் யாவருமே இன்ஷுரன்ஸ் நிதியில் கணிசமான அளவை அறுவடை செய்து கொள்வார்கள். இதற்கெல்லாம் மக்கள்தான் வரிப் பணம் தர வேண்டும். அல்லது பண வீக்கத்தை உண்டு பண்ண வேண்டியிருக்கும். இதன் விபரீத

விளைவுகளை நாம் அறிவோம். ரூபாயின் மதிப்பும் குறைக்கப்பட்டுவிட்ட பிறகு இந்த இன்ஷுரன்ஸ் திட்டம் உகந்ததுதானு என யோசிக்க வேண்டியது மேலும் அவசியமாகி விட்டது.

நல்ல நிருவாகம் இருந்திருப்பின் நாம் வரவேற்க வேண்டிய பயிர் இன்ஷுரன்ஸ் திட்டமே இப்போது வரப் பிரசாதமாக இராமல் சாபத்திடாக ஆகியுள்ளது. பட்ச பாதமற்ற நேர்மையான நிர்வாக அதிகாரிகளைக் கொண்ட ஒரு கமிட்டி அமைத்தால், அது இந்தக் கருத்தையே தெரிவிக்கும். எனினும், அரசியல் தந்திரசாலிகள், 'கிராமப் புற வாக்காளரைப் பிடிக்க இதைப் போல ஒரு திட்டம் உண்டோ?' என்றுதான் சொல்வார்கள்.

★

''ஜைந்த் பாதே சிங் என்ன செய்தாலும் சரி, சீக்கிரத்திலேயே சீக்கியர்கள் சுய ஆட்சிப் பொறுப்புள்ள தனி ராஜ்யம் கேட்கத்தான் செய்வார்கள். ஏனெனில், ஒவ்வொரு சீக்கியருடைய எண்ணத்தின் அடியிலும் சுயராஜ்ய ஆசை இருக்கிறது. எனவே, இச்சமயத்தில் தேசப் பிரிவினை பற்றிய பேச்சுக்களைப் பெரும் குற்றமாக்க வேண்டும்'' என்று சிலர் கூறுகிறார்கள். இவர்களின் அநுமானம் சரி; ஆனால் இவர்கள் கூறும் பரிகாரம்தான் சரியில்லை என்கிறேன்.

இந்தியாவைச் சூழ்ந்துள்ள எல்லைப் பகுதிகள் எல்லாவற்றையும் நமது ஜனநாயகம் பலாத்காரத்தினால்தான் சேர்த்துப் பிடிக்க வேண்டுமா? அவ்வாறு ஏற்பட்டால் பாதுகாப்பு விஷயத்தில் தேசத்தின் கட்டுக்கோப்பு பலவீனமாகவே யிருக்கும். விலகியும், அல்லது விலகினாற்போலவும், உள்ள எல்லைப் பகுதிகளை நல்லெண்ணத்துடனும் நல்லிணக்கத்துடனும் ஆட்சி புரியவே ஜனநாயகம் எப்போதும் முயல வேண்டும். ஆதிவாசிகள் என்பதாலோ, குறிப்பிட்ட ஒரு சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் என்பதாலோ ஒரு மக்கட் தொகையிடம் எழுகிற எண்ணங்களைச் சமாளிப்பதற்கும் பலாத்காரம் தவிர வேறு வழிகளும் உண்டு. மாஜிஸ்திரேட்டுக்களைக் கொண்டு சிறைப்படுத்துவதாலோ, ராணுவத்தினரைக் கொண்டு கட்டுத் தள்ளுவதாலோ தீர்கிற பிரச்னை அல்ல இது. எல்லாம் ஒருபோல் இருக்க வேண்டும் என்ற கொள்கையைக் கடவுளாக்கி வணங்கக் கூடாது. யதார்த்த நிலையைப் புரிந்து கொண்டு அதற்கேற்ப ஒழுங்கை ஏற்படுத்தி ஆட்சி புரிய வேண்டும். நாடு முழுவதும் ஒரு போன்ற நிலை இருக்க வேண்டும் என்பது போலவே நாட்டின் அமைதியும் முக்கியமானது. முன்னதைவிடப் பின்னது அதிக முக்கியமானது என்றுகூடச் சொல்லி விடலாம்.

★

பிரதம மந்திரி ஸ்ரீமதி இந்திராகாந்தி சமீபத்தில் கூறியதாவது: ''சோஷலிஸம் என்பது சொற்றொடர்களாகவோ, வாசனைகளாகவோ வாக்குறுதிகளாகவோ இருக்கக் கூடாது. உலகம் மாறிக் கொண்டேயிருக்கிறது. புதுப் புது பிரச்னைகள் தலை தூக்குகின்றன. இவற்றைப் புதிய வழியிலேயே தீர்க்க வேண்டும். கொள்கைகள் என்பன மாற்ற முடியாத சிலா சாஸனங்களல்ல. மக்களுக்குப் பணி புரிவதற்கே கொள்கைகள். மக்களுக்கு நன்மை செய்யாவிடில் அவற்றை நாம் மாற்ற வேண்டும்.''

மக்கள் சபையில் பேசிய ஸ்ரீ மஸானி பிரதமரின் இந்தக் கருத்துக்களைக் குறிப்பாக எடுத்துக் காட்டினார். அவரது பேச்சில் இப்பகுதியைத் தினசரிப் பத்திரிகைகள் பிரசுரிக்கக் காணோம்.

## வருந்துகிறோம்

பழம் பெரும் கட — மிருதங்க வித்வானுகிய உமையாள்புரம் ஸ்ரீ கோதண்டராமய்யர் அவர்கள் காலமானது குறித்து வருந்தாத சங்கீத ரசிகர் இல்லை. முதலில் மிருதங்க வித்வானுகவும், பிறகு கட வித்வானுகவும் பல கச்சேரிகளுக்குச் சிறப்பளித்த சம்பிரதாய சுத்தமான கலைஞர் அவர். இசைக் குடும்பத்தில் பிறந்து பெரும் வித்வான்களிடம் வித்தையை உபாசித்தவர். சிறிய வித்வான், பெரிய வித்வான் என்ற பேதமின்றி யாரையும் போஷித்தும், பெருமைப்படுத்தியும் மற்றவருக்குக் கௌரவம் தருவதிலேயே தமக்கும் கௌரவம் பெற்றுக் கொண்ட பெரியவர் அவர். விஷயமறிந்தவர்கள் அவரது வாசிப்பையும் பெருந்தன்மையையும் என்றும் மறக்க மாட்டார்கள்.





# இளமையிற் கல்

சமையல் பயிலும் சிறுமி. அவளே வருங்காலக் குடும்பத் தலைவி. கற்றுக்கொடுங்களேன் ஒரு நாள். எவ்வளவு விரைவில் கற்றுக்கொடுக்கிறீர்களோ அவ்வளவுக்கு அவ்வளவு மேல்.

உங்கள் குழந்தைகளுக்கு நீங்கள் இப்போதே கற்றுக்கொடுக்க வேண்டிய மற்றொரு பாடம், பற்களையும் ஈறுகளையும் ஒழுங்கு தவறாமல் பராமரிப்பதே. பற்சிதைவும் ஈறு நோய்களும் வராமல் பாதுகாத்த உங்கள் உதவிக்காகப் பிற்காலத்திலே நன்றி செலுத்துவார்கள் அவர்கள்.

போர்ஹான்ஸ் பற்பசைகொண்டு பற்களையும் ஈறுகளையும் பாதுகாத்துக்கொள்ள இன்றே பழக்குங்கள் உங்கள் செல்வங்களை. அது ஒரு பல் வைத்தியரின் தயாரிப்பாகும்; ஈறுகளின் நலனுக்காக டாக்டர் போர்ஹான்ஸ் தயாரித்த விசேஷத் துவர் மருந்துகள் அடங்கிய பற்பசை உலகில் இதுவொன்றே. தவறாமல் உபயோகித்துவந்தால் பளிச்சென்ற வெண் பற்களையும் பலமான உறுதிவாய்ந்த ஈறுகளையும் பெற்று விளங்குவது திண்ணம்.

"CARE OF THE TEETH AND GUMS" என்ற சிறிய வண்ணப் புத்தகத்தை இலவசமாகப் பெற, தபால் செலவுக்காக 10 பைசா தபால் வில்லைகளை இணைத்து எழுதவும்: மானேர்ஸ் டென்ட்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை நம்பர் 10031, பம்பாய்.




K.6

## COUPON

Please send me a copy of the booklet "CARE OF THE TEETH AND GUMS"

*Name* ______________________

*Address* ______________________

______________________

# 6. தம்பிரான் தோழர்




சித்தவத்திலிருந்து புறப்பட்டார், சுத்த சிவத்தின் சேவடி தாங்கிய சுந்தரர். மாவலியை அடக்கிய வாமன மூர்த்தி வழிபட்ட திருமாணிகுழியையும், திருத்தினை நகரையும் வழிபட்டு, திருப்பதிகங்கள் பாடி, இடையில் உள்ள தலங்களையும் வணங்கி எல்லை மிதித்தவுடன் பிறவி இல்லை என்று தொல்லை மறைகள் புகழும் தில்லையம்பதியடைந்தார். தூல லிங்கமாகிய திருக்கோபுரத்தைக் கண்டவுடன் ஆராக் காதலுடன், மண்மிசை வீழ்ந்து பணிந்தார். உள்ளம் உருகினார். சிதம்பரத்தில் உள்ள அடியார்கள் எதிர்கொண்டு பணிந்தார்கள். வேதவொலியும், ஆகம கீத ஒலியும், தேவார நாதவொலியும், ஆடல் ஒலியும், வேள்விப் புகையும் மிகுந்த திருவீதியை வணங்கி, அடியார்களும் முனிவர்களும் நெருங்கியுள்ள திருக்கோயிலுக்குள் சென்று, பொன்னம்பலத்துக்கு முன் நின்று நடேசப் பெருமானைக் கண் குளிரக் கண்டார். மதுவுண்ட வண்டு போல் கூப்பிய கரத்துடன் அசைவற்று நின்றார்.

ஐந்துபே ரறிவுங் கண்களே கொள்ள
அளப்பருங் கரணங்கள் நான்கும்
சிந்தையே யாகக் குணமொரு மூன்றும்
திருந்துசாத் துவிகமே யாக
இந்துவாழ் சடையா னாடு மானந்த
எல்லையில் தனிப் பெருங் கூத்தின்
வந்தபே ரின்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்

நாமும் கனகசபைக்குப் போகிறோம், சுவாமியைத் தரிசிக்கின்றோம்; திரும்புகிறோம். சுந்தரர் இப்படியா தரிசித்தார்? காது கேட்கவில்லை; மூக்கு முகரவில்லை. எல்லா அவயவங்களும் ஒடுங்கிக் கண்களே ஆண்டவனைப் பார்க்கின்றன. கரணங்களாகிய மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற நான்கும் சிந்தையில் ஒடுங்கி விட்டனவாம். சத்துவ குணம், ராஜஸ குணம், தமோ குணம் மூன்றும் ஒரே சாத்துவிகமாக அமைந்தனவாம். நம்பியாரூரருக்கு ஆனந்த வெள்ளம் பொங்கித் ததும்பியது. அதில் தம்மையே கரைத்துக் கொண்டார். பதிகம் பாடித் துதி செய்தார்.

''அன்பனே! நமது திருவாரூருக்கு வருக'' என்ற அருள் வாக்கு வானத்தில் எழுந்தது.

சுந்தரர் அம்பலவாணர் திருவருளை வியந்து, எம்பெருமான் கட்டளையைச் சிரமேல் தாங்கித் தொழுது தில்லையிலிருந்து பிரியா விடை பெற்றுப் புறப்பட்டனர்.

கொள்ளிட நதியைத் தாண்டிச் சீர்காழியைச் சேர்ந்தார் வன்றொண்டர். அம்மை திருமுலைப் பாலுண்ட எம்மையாளுடைய திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள் அவதரித்த தலமாதலின் அதனைக் கால் கொண்டு மிதிக்க அஞ்சி எல்லையிலிருந்து வணங்கினார். சீர்காழி மேவிய சிவபெருமான் அங்கே காட்சி கொடுத்தருளினார். அவ்வூரின் திருக் கோலத்தைக் கண்டு ஊனுருகி உள்ளம் குழைந்த நம்பியாரூரர், கழுமலத்திறைவர் தமக்குக் காட்சி கொடுத்ததைக் குறிப்பிட்டுப் பாடிப் போற்றினார்.

சாதலும் பிறத்தலும்
தவிர்த்தெனை வகுத்துத்
தன்னருள் தந்தவெந்
தலைவனை மலையின்
மாதினை மதித்தங்கோர்
பால்கொண்ட மணியை
வருபுனல் சடையிடை
வைத்தவெம் மானை

ஏதிலென் மனத்துக்கோ
ரிரும்புண்ட நீரை
எண்வகை யொருவனை
எங்கள் பிரானை

காதில்வெண் குழையானைக்
கடல்கொள மிதந்த
கழுமல வளநகர்க்
கண்டுகொண் டேனே

காயும் இரும்பில் வார்த்த நீரை அது உறிஞ்சிக் கொள்ளுமா போலே தம்மை இறைவன் ஆட்கொண்டு விட்டார் என்று திருப்பதிகம் பாடினார். திருக்கோலக்கா, திருப்புன்கூர் தரிசித்து, காவிரியில் முழுகி, மாயூரம், அம்பர் மாகாளம், திருப்புகலூர் முதலிய திருத்தலங்களைச் சேவித்துக் கொண்டு திருவாரூருக்கு அருகில் வந்தார்.

நீராருஞ் சடை மீசை நிலவணிந்த நிமலன் தேராருந் தெருவுடைய திருவாரூர்வாழ் அன்பர்களது கனவில், ''ஆராத காதலுடன் நாம் அழைக்க நம்பியாரூரன் வருகின்றான்; சோராத அன்போடவனை எதிர்கொண்டு அழையுங்கள்'' என்று பணித்தருளினார். திருவாரூர்வாழ் திருத் தொண்டர்கள் எம்பிரானால் தடுத்தாட் கொள்ளப் பெற்ற சுந்தரரது பெருமையை வியந்தனர்; நகரை நன்கு அலங்கரித்தனர்; வீதிகள் எங்கும் தோரணம் கட்டினர்; வீடுகள் தோறும் மணி விளக்கும் நிறை குடமும் வைத்தனர்.

கடல் திரண்டது போல் ஆரூர் அன்பர்கள் எதிர்கொண்டு நம்பியாரூரரை அழைத்தனர். தம்மை எதிர்கொண்டு அழைத்து வரவேற்ற திருவாரூர் வாழும் தொண்டர்களைக் கைகூப்பித் தொழுதார் நம்பியாரூரர். ''எந்தையாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் பெரும் சிறப்புடைய திருப்பதி இத்திருவாரூரே. இங்கெழுந்தருளிய இறைவர் அடியேனையும் ஆட்கொண்டருள உளம் இசைவாரோ என்பதை அன்புகூர்ந்து அவர்பால் கேட்டுத் தெரிவிப்பீராக'' என்று வினவி வேண்டினார்.

கரையும் கடலும் மலையும்
காலையும் மாலையு மெல்லாம்
உரையில் விரவி வருவான்
ஒருவன் உருத்திர லோகன்
வரையின் மடமகள் கேள்வன்
வானவர் தானவர்க் கெல்லாம்
அரையன் இருப்பதும் ஆரூர் அவர்
எம்மையும் ஆள்வரோ கேளீர்.





பின்னர் திருக்கோயிலுள் நுழைந்து, தேவாசிரியன் மண்டபம் தொழுது, புற்றிடங் கொண்ட புராதனனைப் போற்றினார். உருகி உருகி உள்ளத்தில் அன்பு வெள்ளம் பெருகிப் பெருகி ஆராக் காதலுடன் துதித்தார். அப்பொழுது "சுந்தரனே! உனக்கு நம்மைத் தோழராகத் தந்தோம்; நாம் முன்பு தடுத்தாட்கொண்ட காலத்து நீ புனைந்திருந்த திருமணக் கோலத்துடன் எப்போதும் இருந்து மண்மிசை விளையாடுவாய்" என்று ஒரு வாக்கு அனைவரும் கேட்க வானில் எழுந்தது.

இந்த இடம் அன்பர்கள் நன்கு சிந்திக்கத் தக்கது. "நான் உன்னைத் தோழனாக்கிக் கொண்டேன்" என்றும், "இன்று முதல் நீ எனது தோழன்" என்றும், "நான் உனது தோழன்" என்றும் பெருமான் கூறவில்லை. "தோழராக நம்மை உனக்குத் தந்தோம்" என்பதில் எத்துணை ஆழம் உளது? "தந்ததுன் தன்னை" என்பார் மணிவாசகர்.



மாலயனாதி வானவர்கள் யாவரும் ஈசனுடைய அடிமைகளே; குபேரன் அரிதில் முயன்று தோழரானார். சுந்தரரை இறைவன் வலிதில் தாமே தோழராக்கிக் கொண்டார்.

இறைவனுடைய அருள் மொழியைக் கேட்ட நம்பியாரூரர், "பெருமானே! நின் கருணைத் திறனை என்னென்று புகழ்வேன்? வலிய ஆட்கொண்ட வள்ளலே!" என்று துதித்தனர். அன்று தொட்டு அவரை, அடியவர்கள் "தம்பிரான் தோழர்" என்றே அழைப்பாராயினார்கள். சுந்தரர் திருமணக் கோலத்துடன் விளங்கி, நாடோறும் புற்றில் மேவும் புண்ணியனையும், தியாகேசனையும் இனிது சேவித்து, தமிழ் மாலைகளால் இறைவனை அலங்கரித்து வருவாராயினார்.

முன்னே திருக்கைலாய மலையில் ஆலால சுந்தரர் விரும்பி நோக்கிய உமையம்மையாரது சேடிகள் இருவரில் ஒருவராகிய கமலினியம்மையார், திருவாரூரில் உருத்திர கணிகையர் மரபிலே அவதரித்தனர். பரவையார் என்ற திருப்பேர் கொண்டு பனிமதியென வளர்ந்தனர்.

மானிளம் பிணையோ தெய்வ
  வளரிள முகையோ வாசத்
தேனிளம் பதமோ வேலைத்
  திரையிளம் பவள வல்லிக்
கானிளங் கொடியோ திங்கட்
  கதிரிளங் கொழுந்தோ காமன்
தானிளம் பருவங் கற்குந்
  தனியிளந் தனுவோ என்ன

அழகு ஒரு வடிவம் பெற்றதுபோலும் அறிவின் சிகரம் போலும் அன்பின் கருவூலம் போலும் விளங்கினார். (தொடரும்)




# ஒன்று சேர்ப்பது

## ஒரு கோப்பை புத்தம் புதிய, தெம்பூட்டும்

# ப்ரூக் பாண்ட் காபி

எங்கும் ... எந்நேரமும் ... நண்பர் குழாம் ஒவ்வொன்றிலும், ப்ரூக் பாண்ட் காபி உல்லாசம் உண்டு பண்ணுகிறது. மக்களை ஒன்று சேர்க்கிறது. நாகரீக வாலிபர்கள் ஆணையிட்டுச் சொல்வார்கள். பெற்றோருக்கோ இது இல்லாவிட்டால் முடியாது! ஏன்? புத்தம் புதிய, தெம்பூட்டும், கமகமவென்ற மணம் இருப்பதால்தான் - எப்போதைக் காட்டிலும், இன்று ப்ரூக் பாண்ட் காபி தரத்தை நிர்ணயிக்கிறது!

BENSONS2/BBC-17D TAM

# காஷ்மீர் பொக்கே டால்க் உபயோகித்து மணிக்கணக்காக சுகந்தத்துடனும் புதுமையுடனும் இருங்கள்

அன்றலர்ந்த மலர்களின் புதுமையுடனும், சுகந்தத்துடனும்கூடிய காஷ்மீர் பொக்கே டால்க் உங்களைச் சூழ்ந்து பரவி இருக்கட்டும்...உங்களைச் சுற்றி அதன் குளுமையான, பூவிதழ்போன்ற மென்மையான ஸ்பரிசத்தையும், வசீகரிக்கும் நறுமணத்தையும் உணர்ந்து அனுபவியுங்கள். பலமணிகளுக்குப் பிறகும், காஷ்மீர் பொக்கே டால்க்கின் குன்றாத நறுமணமும், புதுமையும், மலர்க்கொத்துகள் போன்று உங்களைச் சூழ்ந்து நிற்பதை உணர்வீர்கள்.






காஷ்மீர் பொக்கே ஒரு உன்னதமான அழகுசாதன டால்க் மட்டுமல்ல. குழந்தைக்கும் ஏற்ற அற்புத டால்க். அது இருவருமே உபயோகிக்கக்கூடிய சௌகரியமான ஒரு பவுடர்!






## காஷ்மீர் பொக்கே

[illegible] விரும்பும் சுகந்தமுள்ள டால்கம் பவுடர்

கால்கேட்டின் தரமான தயாரிப்பு



## வாழ்க சீதா - வைத்தியநாதன் !

சென்னை அபட்ஸ்பரியில் திரு வைத்தியசுப்பிரமணிய அய்யர் அவர்களின் புதல்வர் திரு வைத்தியநாதனுக்கும், பம்பாய் மஃபத்லால் தொழில் நுணுக்க அதிகாரி திரு ஆர். நாராயணன் அவர்களின் புதல்வி சௌ. சீதாவுக்கும் வெகு சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது. சென்னை ராஜ்ய மந்திரிகளும், நீதிபதிகளும், பிரமுகர்களும் விவாகத்துக்கு வந்திருந்து மணமக்களை ஆசீர்வதித்தனர். விவாகத்தையொட்டி வித்வத்சதஸ் ஒன்று நடைபெற்றது. இவ்வைபவத்தில் சோமதேவ சர்மா இயற்றிய 'ஸதாசாரம்' என்ற நூலையும், காசி கனபாடிகள் எழுதிய 'விவாக மந்திரார்த்தங்கள்' என்ற நூலையும் ஓய்வுபெற்ற சுப்ரீம் கோர்ட் நீதிபதி ஸ்ரீ டி. எல். வேங்கடராமய்யர் தலைமையில் வெளியிட்டனர்.



இரும்புக்கு விடை கொடுக்கும் காலம் நெருங்கி விட்டது. பிளாஸ்டிக்கினால் தயாரிக்கப்பட்ட பிரம்மாண்டமான பல் சக்கரங்கள், மேற்கு ஜெர்மன் ஹனோவரில் தொழில் கண்காட்சியில் இடம் பெற்றிருந்தன. எஃகைப் போல உறுதியாக உழைக்கக் கூடியவை.

(யூ. பி. எஸ்.)

## புகையின் எடை!



இங்கிலாந்தில் எலிஸபெத் மகாராணி ஆட்சி செய்து கொண்டிருக்கையில் வீரம் நிறைந்த கனவான்களில் ஸர் வால்டர் ராலே சிறந்து விளங்கினர்.

வால்டர் மகாராணிக்கும் புகையிலையைப் பற்றித் தெரிவிக்க எண்ணி ஒரு நாள், "மகாராணி, புகையையும் எடை போட்டு நிறுத்துச் சொல்ல முடியும்!" என்று கூறினர். இராணிக்கு அவருடைய கூற்று வியப்பாகவே தோன்றிற்று. இருவரும் பந்தயம் கட்டிக் கொண்டனர்.

வால்டர் கொஞ்சம் புகையிலையை எடுத்து நிறுத்து வைத்துக் கொண்டு, அதைத் தம் குழலில் அடைத்துத் தீப்பற்ற வைத்து, புகை பிடிக்கலானார். அவர் வாயிலிருந்து புகை வெளியே போய்க்கொண்டே யிருந்தது. புகையிலை முழுதும் எரிந்த பிறகு அவர் குழலிலிருந்த சாம்பலைக் கொட்டி நிறுத்துக் காட்டினார். புகையிலையின் எடையிலிருந்து மிஞ்சியிருந்த சாம்பலின் எடையைக் கழித்து, எஞ்சியது புகையின் எடை என்று அவர் இராணியிடம் தெரிவித்தார்! அவர் சொல்லியது சரிதான் என்பதை இராணியும் ஒப்புக்கொண்டார். வால்டர் பந்தயத்தில் வெற்றி பெற்றார்.

- நெய்தல் மூர்த்தி



காதலி காதலனிடம் கண்டிப்புடன் சொன்னாள்: "நான் தீர்மானமான முடிவுக்கு வந்து இதைச் சொல்லுகிறேன்; உடனடியாக நீங்கள் கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்யாவிட்டால், அப்படிச் செய்கிறவரை காத்திருப்பேன்!" - ரதன்

## நெப்போலியனின் தமிழ்ப் பற்று!

கீழ்த்திசை நாடுகளையெல்லாம் வென்று வாகை சூட விரும்பிய நெப்போலியன், அவற்றின் பழக்க வழக்கங்களையும் கலாச்சார மரபுகளையும் அறிந்து கொள்வதற்காக அந்நாடுகளில் தோன்றிய சிறந்த இலக்கியங்களைப் படிக்க விரும்பி, அவற்றை வாங்கித் தனது நூல் நிலையத்தில் வைத்திருந்தான். அவற்றில் ஒன்று கம்பராமாயணம்.

ஆதாரம்: 'ஒன்றே உலகம்'

தகவல்: 'முருகு'



பல்சுவைப்பக்கம் 2

## கடவுளும் உருளைக்கிழங்கும்!



ஸ்டாலின் ஆட்சியின்போது கம்யூனிஸ்டு அதிகாரி ஒருவன் குடியானவன் ஒருவனைச் சந்தித்தான். "நமது திட்டத்துக்கு இணங்க உங்கள் புதிய உருளைக்கிழங்கு உற்பத்தி எப்படி இருக்கிறது?" என்று கேட்டான்.

குடியானவன் பதில் சொன்னான்: "நம்முடைய திவ்விய கீர்த்திவாய்ந்த தலைவர் ஸ்டாலின் கட்டளைக்கு இணங்க நாங்கள் பயிரிட்ட உருளைக்கிழங்குகள் அற்புதமாக விளைந்திருக்கின்றன. எங்கள் உருளைக் கிழங்குகளையெல்லாம் ஒருசேரக் குவித்தால் அந்தக் குவியல் ஒரு மலைபோலாகி விடும்; அந்த மலை கடவுளின் திருவடிகளை எட்டக் கூடிய அளவுக்கு உயர்ந்துவிடும்!"

"ஆனால் கடவுள் இல்லையென்பது உனக்குத் தெரிந்ததுதானே?" என்றான் அந்த அதிகாரி.

"உருளைக்கிழங்கும் இல்லைதானே!" என்று அடக்கமாகப் பதில் சொன்னான் குடியானவன்.

- பாலன்.

## மாற்றுப் பெயர்கள்!



'இந்தியாவின் வாயில்' என்பது பம்பாயைக் குறிக்கிறது. இதைப் போல் கீழ்க்கண்டவற்றை இணைசேருங்கள், பார்க்கலாம்!

1. எருமை நாடு: பர்மா; 2. ஐந்து நதி நாடு: கியூபா; 3. சர்க்கரைக் களஞ்சியம்: மைசூர்; 4. வெள்ளை யானை நாடு: பஞ்சாப்; 5. பகோடா நாடு: தாய்லாந்து.

— காழி ஜெயா

(விடை 41ம் பக்கம் பார்க்க)

"நேற்று நான் இங்கே அழைத்து வந்தேனே, அவளைத்தான் கட்டிக் கொள்ளப் போகிறேன்" என்று மகன் ஒரு குண்டைத் தூக்கிப் போட்டான்.

"அவளைப் பார்த்தால் பணக்காரியாகத் தெரியவில்லையே?" என்று பதறினார் தந்தை.

"அவள் அடுப்படியில் குனிந்து வேலை செய்வாள் என்று எனக்குத் தோன்றவில்லை" என்றாள் பெற்றவள்.

"அவள் உடையைப் பார்த்ீர்களா? சினிமாக்காரி மாதிரி..." என்று ஏளனம் செய்தாள் சகோதரி.

"அவள் ஒரே கறுப்பு. முகத்தில் பவுடரை அப்பிக் கொண்டிருந்தாள்" என்று, கண்களைச் சுருக்கிக் கொண்டு அருவருப்பைக் காட்டினாள் அத்தை.

"இந்த லட்சணத்தில் என்ன ஸ்டைல்...!" என்றான் தம்பி.

"நீங்கள் சொல்லும் இத்தனை குறைபாடுகளும் அவளுக்கு இருந்தாலும், அவள் ஒரு பெரிய பாக்கியத்தைப் பெற்றிருக்கிறாள் — அவளுக்குக் குடும்பம் எதுவும் கிடையாது!" என்று கோபத்தோடு கூறினான் மகன்.

—ரதன்

## அவள் பெற்ற பாக்கியம்!





மனிதனுடைய வாழ்நாள் பூராவும் அவன் காதுகள் வளர்ந்து கொண்டே யிருக்கின்றன என்று கண்டுபிடித்திருக்கிறார்கள். யானையின் காதுகளைப் போல் அத்தனை பெரிதாக வளர்ந்து விடுமாம் அவன் காதுகளும்; ஆயிரம் வருஷங்கள் அவன் உயிர் வாழ்ந்தால்!

— ஏ. கே. கந்தசாமி

ஆதாரம்: 'லைன் லைஃன்



"என்ன சார் இது அநியாயம், மணி ஏழாகிறது. இன்னும் திரை விலகலே?"

"நாடகத்தின் பெயரே திரை மறைவிலே தானே!"

-மல்லன்

# கலை + உழைப்பு =



சமீப காலமாகச் சென்னையின் பல பகுதிகளிலும் அரங்கேறி ரசிகப் பெருமக்களின் ஏகோபித்த பாராட்டுதல்களைப் பெற்றுவரும் எதிர்நீச்சல் நாடகத்தின் தயாரிப்பாளர் திரு கே. பாலசந்தர் அவர்களையும் அதில் பிரதான பாகமேற்று நடிக்கும் திரு நாகேஷ் அவர்களையும் சேர்ந்தாற்போல் ஒரே சமயத்தில் ஒரே இடத்தில் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தோம். பேச்சினிடையில் அவ்வப்போது நமது புகைப்படக் கலைஞர் காமிராவை இயக்கிக் கொண்டேயிருந்தார்.



**நாகேஷ்:** நாடக ஒத்திகையின்போது பாலுவின் கெடுபிடி எல்லாம் ரொம்பப் பலமாக இருக்கும். ஒரு தவறையும் அனுமதிக்க மாட்டார். ஆனால் நாடகம் நடக்கிறபோது ஏதாவது ஒண்ணு இரண்டு சிறு தவறுகள் நடந்தால் அதைத் தாராளமாகவே மறந்துவிடுவார். அதற்கு ஒரு ரகசியக் காரணம் உண்டு. பல வருஷங்களுக்கு முன்னாலே 'புதைக்கப்பட்ட உண்மை' என்கிற நாடகத்திலே, நம்ப பாலு ஒரு டாக்டராக வந்தார். ஸ்டெதாஸ்கோப்பைக் காதில் வைத்துக் கொள்ளாமல் கழுத்தில் மாட்டியபடியே நோயாளியைப் பரிசோதனை பண்ணி முடித்து விட்டார். ரசிகர்கள் சலசலப்போடு அந்தக் காட்சியைக் கண்டு மகிழ்ந்தார்கள். இப்பவும் நம்ப பாலுவுக்கு டாக்டர் வேஷம்னு ஒரு அலர்ஜிதான்.

**நாகேஷ்:** பாலு! நீ எழுதித் தயாரிச்ச முதல் நாடகம் எதுன்னு நினைவிருக்கா?

**பாலசந்தர்:** ஓ! நினைவிருக்கே. பள்ளிக்கூட நாட்களிலே திண்ணைதான் எங்களுக்கு நாடக மேடை. தெருவிலே நின்னுக்கிட்டு வேடிக்கை பார்ப்பாங்களே எங்களை!



# கலைஞர்கள்



பாலசந்தர்: நாடகங்களிலும், திரைப்படங்களிலும் புதிய முயற்சிகளைச் செய்யுங்கள் என்றால் அதற்கு 'அதை ஜனங்க விரும்ப மாட்டாங்க, ஜனங்களுக்குப் பிடிக்கிறதைத்தான் தயாரிக்க முடியும்' என்று பதில் சொல்றது தவறு. உதாரணமாக ஒரு சின்ன விஷயம் சொல்றேன். எதிர் நீச்சல் நாடகம் பார்த்த ஒரு சாதாரண குடும்ப ஸ்திரீ எனக்கு எழுதிய ஒரு கடிதத்தில் '' 'படவா ராஸ்கல்' என்கிற இரண்டு வார்த்தைகளை ஏதோ ஸ்ரீராமஜெயம் என்பது போன்ற புனிதச் சொல்லாகத் தோன்றச் செய்து விட்டீர்கள்'' என்று குறிப்பிட்டிருந்தாள். இவர்களைப் போன்ற ரசிகர்களின் திறமையை நாம் மதிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். அவர்களைக் குறைவாக மதிப்பிட்டால் நமக்குத்தான் இழுக்கு!



நாகேஷ்: சினிமாவை விட நாடகத்திலே என் திறமை அதிகமா வெளிப்படுறது என்கிறீர்களா? அதிலே ஆச்சரியமென்ன? சினிமாவிலே ஒரு கட்டத்திலே, 'குதி'ன்னு சொல்லிடுவாங்க. நான் உடனே மேலே யிருந்து கீழே 'டாண்'னு குதிச்சிடுவேன். 'டேக்' ஆயிடும். எதுக்குக் குதிக்கணும்? ஏன் குதிக்கணும்? என்பதை யெல்லாம் அலசிப் பார்த்துக் கொண்டிருக்க அங்கே யாருக்கும் அவகாசமும் கிடையாது. பொறுமையும் கிடையாது. ஏன்னு அங்கே ஒவ்வொரு நிமிஷமும் பணத்தையெல்லாம் முழுங்கிக் கொண்டு ஏப்பம் விட்டுக்கிட்டு இருக்கு. ...



...நாடகத்திலே அப்படியெல்லாம் இல்லே. ஏன் குதிக்கணும், இந்தக் கட்டத்திலே குதிச்சா, பார்க்கிறவங்க ஆர்வத்தோட கைதட்டுவாங்களா, இல்லே ஆயாசத்தோடு கன்னங்களில் கை வைத்து உட்கார்ந்திருப்பாங்களா என்று எல்லாம் முன் கூட்டியே நான் கணக்கிலே உட்கார்ந்து டிஸ்கஸ் பண்ணிடறோம். டிராமாவிலே அந்த இடம் கச்சிதமா அமைஞ்சுவிடுது.

நாகேஷ்: 'நாகேஷா? ஹீரோவாகவா? நாடகத்திலே சமாளிக்கலாம்' சார்! ...ஆனால் சினிமாவிலே...என்னமோ யோசிக்கச் செய்யுங்க' என்று நீர்க்குமிழி, சர்வர் சுந்தரம் ஆகிய படங்கள் எடுக்கப்பட்டபோது பயமுறுத்தினவங்க உண்டு. ஒரு ஹீரோ என்றால் அவன் இப்படி இப்படித்தான் இருக்க வேண்டும் என்று லட்சணம் வகுக்கப் பட்டிருக்கிறதா? நாடகாசிரியனின் மனோதர்மப்படிதானே கதாநாயகன் அமைய வேண்டும்? அதாவது கதாபாத்திரத்தை உணர்ந்து நடிகன் நடிக்க வேணுமே தவிர ஒரு நடிகருக்காகக் கதை வசனம் அல்லவே?



**நாகேஷ்:** மாம்பலத்திலே ஜானகிக்கு அரை மணி நேரத்திலே நாலு ஃபோன் கால்! சௌகார் ஜானகி பட்டு மாமியாக வந்து சக்கைப் போடு போட்டாரல்லவா? அவரை டெலிபோன் மூலமாகப் பாராட்ட வேண்டுமென்று ரசிகர்களுக்கு ஆவல்.

''ஜானகி பேசறேன். நீங்க யாரு?''

''நேத்திகொன்னுப்புட்டேள்போங்கோ!''

''நீங்க என்ன சொல்றேள்! எனக்குப் புரியலே!''

''பலே! நாடக எஃபக்ட் இன்னும் போகலியே! அதே மாதிரி வீட்டிலும் பேசறேளே!''

''நாடகமா? என்ன சொல்றேள்?''

''இப்பத்தான் ரொம்பப் பிரமாதமா நடிக்கிறேள்!''

நல்ல வேளை! இந்த டயலாக் ரொம்ப நேரம் நீடிக்கவில்லை! அந்த ஜானகி அம்மாள் வேறு யாரோ! ஆனால் அந்த அம்மாளுக்கு இந்த மாதிரிப் பல தடவைகள் போன் வந்தது! எப்படி பட்டு மாமி பாத்திரம்!



**பாலசந்தர்:** எப்பவாவது ஓரிரு சந்தர்ப்பங்களிலே நாகேஷ் தன் டயலாக்குகளில் எதையாவது மறந்து விட்டு விட்டால், நாடகம் முடிந்தவுடன் வந்து, 'சாரி பாலு' என்று சொல்லத் தவறியதே யில்லை!

**பாலசந்தர்:** எதிர் நீச்சல் ஆரம்ப தினம் மாலே வேளை. திரை விலக இன்னும் சில நிமிடங்கள்தான் இருந்தது. மேக்கப்பை முடித்துக் கொண்டு வசனப் புத்தகத்தைப் புரட்டிக் கொண்டிருந்த நாகேஷ் திடீரென்று என்னைப் பார்த்து. ''பாலு! என்ன பண்றதுன்னே தெரியலே! நாடக வசனம் எதுவுமே ஞாபகத்துக்கு வரலே! சுத்தமா எல்லாம் மறந்து போய்விட்டதாக ஓர் உணர்ச்சி'' என்றார். அவர் நடிக்கவில்லை. ஆத்மார்த்தமாகத்தான் சொன்னார்.

**நாகேஷ்:** அதற்கு இவர் என்ன பதில் சொன்னார் தெரியுமா? ''நீயாவது பரவாயில்லே! வசனம் மறந்து போச்சு என்கிறே!



எனக்கு இப்போ கதையே மறந்து போய் விட்டது போன்ற பிரமை! எல்லாம் திரை விலகினால் தன்னால் நினைவுக்கு வரும்'' என்றார். எங்கள் நிலை அப்படித்தான் இருந்தது. என்னதான் உழைத்தாலும் தீர்ப்பளிப்பவர்கள் ரசிகர்களாயிற்றே!



**பாலசந்தர்:** கிளம்பிட்டீங்களா? சரி, போய் வாருங்கள்!

புகைப்படங்கள்: கிருஷ்ணசாமி

பேட்டி கண்டு படவிளக்கம் தருபவர்: 'மேனு'







## Khosla Fans
INDIA PRIVATE LIMITED

ரீஜினல் ஆபீஸ்:

**கோஸ்லா எஞ்சினீயரிங் கம்பெனி**

2-A, வடக்கு கிரஸண்ட் ரோடு
தியாகராயநகர், சென்னை-17
போன்: 84140

இருவிதமாக இயங்கும்

# குடிகூரா ஆயின்ட்மென்ட்

## உங்கள் சருமத்திற்குத் தேவைப்படுவது ஏன்

குடிகூரா ஆயின்ட்மென்ட் சருமத்தில் கருப்புமச்சங்கள் பருக்கள் படைகள் முதலியவற்றிற்குக் காரணமான கிருமிகளை அழித்து உங்கள் சருமத்திலிருந்து இரத்ததோஷங்களை அறவே நீக்கி விடுகிறது. குடிகூரா ஆயின்ட்மென்டிலுள்ள ஊடுருவிச் செயலாற்றும் ஆன்டிஸெப்டிக் தைலங்கள், சுட்ட புண்கள், சருமவெடிப்புகள், சிறுப்புகள், சேற்றுப்புண்கள், பூச்சிக்கடிகள், மேகப்படை முதலியவற்றிலிருந்து இதமான நிவாரணமளிக்கின்றன.

மேலும், குடிகூரா ஆயின்மென்ட் துரிதமாக உங்கள் சருமத்திற்கு மீண்டும் ஆரோக்கியத்தை அளித்துக்கொண்டே அதேசமயம் சருமத்தை லேசாக ஊக்குவித்து செம்மைப்படுத்துகிறது—சருமத்தை மிருதுவாகவும் மழமழப்புடனும் வைத்துக்கொள்ளுகிறது.

**2 அளவுகளில் கிடைக்கிறது**




பெரிய சைஸ்
25 கிராம்

சிறிய
சைஸ்
5 கிராம்




**குடிகூரா ஆயின்ட்மென்ட்**

சருமப் பராமரிப்பிற்கு உலகிலேயே மிகப் பிரசித்தமான பெயர்

NAS-697b

# கலையழகு நிறைந்தவை!
# பின்னியின் தூய பட்டு வேஷ்டிகள் மற்றும் அங்கவஸ்திரங்கள்

தனிப்பெருமை அவற்றில் பொலிகிறது. குறைவற்ற நெசவு என்ன, அவற்றை அணிவதிலே உள்ள சுகம் என்ன — எல்லாமாக, உங்கள் கம்பீரமான தோற்றத்திற்கு ஒரு மெருகு கொடுக்கின்றன. சரிகைக் கரையுடன், எல்லா அத்தாட்சி பெற்ற பின்னி விற்பனையாளரிடமும் கிடைக்கும்.



## பின்னியின் தூய பட்டு வகைகள்

ஜார்ஜெட், ஷிபான் மற்றும் மென்பட்டு புடவைகள், ஸொரூடா ஷாட் ஸில்க் புடவைகள், ஸ்பன் மற்றும் ப்ளெய்ன் ஸில்க் ஷர்ட்டிங்குகள், ஸில்க் சூட்டிங், வேஷ்டிகள் மற்றும் அங்கவஸ்திரங்கள்.

பெங்களூர் உல்லன், காட்டன் & ஸில்க் மில்ஸ் கம்பெனி லிமிடெட், அக்ரஹாரம் ரோடு. பெங்களூர் 23. பின்னி & கம்பெனி லிமிடெட், மதராஸ், ஸ்தாபனத்தின் ஒரு கிளை

# COCOA MALTINE
## the national family food beverage goes INTERNATIONAL




பொருள்களைத் தரமறிந்து உபயோகிக்கும் உலகெங்குமுள்ள மக்களின் நம்பிக்கையைப் பெற்றிருப்பது குறித்து கோகோ மால்டீன் நியாயமான பெருமை கொள்கிறது. பெருமளவு போட்டியுள்ள உலக மார்க்கெட்டுகளில் உறுதியாகவும் சரியான முறையிலும் கோகோ மால்டீன் இடம் பெற்று வருகிறது. இந்த சக்தியளிக்கும் உணவு பானம் செல்லுமிடங்களிலெல்லாம் ஊட்டக் குறைவை நிரப்பும் ருசியும் புஷ்டியும் மிக்க லட்சிய உணவுப் பொருள் என்று மக்கள் விரைவில் அறிந்து வருகிறார்கள். மேலும் மேலும் மக்கள் கோகோ மால்டீன் உபயோகிக்கும் நிலைக்குமாறி வருகிறார்கள் என்பதில் ஆச்சரியமே இல்லை.

# கோகோ மால்டீன்

புத்துணர்ச்சியும் வலிவும் அளிக்கும் லட்சிய உணவு பானம்.






## கோகோ மால்டீன் லாபரட்டரீஸ்

உரிமையாளர்கள்: டிரேட் லிங்க்ஸ் பிரைவேட் லிட்., 46, புஸா ரோடு, புது டில்லி-5, போன்: 52835

பிராந்திய விற்பனை ஆபீஸ்: 76, எல்லிஸ் ரோடு, மவுண்ட் ரோடு, சென்னை-2 போன்: 86982 தந்தி: SOUTHLAND

TL-NP-23

## அட்டைப்படக் கதை

# பல

ஜெ.எஸ்.கே.

அந்த நிகழ்ச்சியைப் பற்றி எண்ணிப் பார்க்கும்போது, கூடவே ஆச்சரியமான நினைப்பும் தோன்றுகிறது.

சென்ற வாரம் நடந்தது அது.

தஞ்சாவூரிலிருந்து புறப்பட்டு நீடாமங்கலம் போய்க் கொண்டிருந்தேன். ரயிலில் தான். மூன்றும் வகுப்பு. ஆனாலும் அவ்வளவு கூட்டம் இல்லே.

வண்டி புறப்பட வேண்டிய நேரமாகியும் அது கிளம்புவதற்கான அறிகுறியைக் காணோம். இஞ்சின் கோத் தாகிவிட்டிருந்தது. பச்சை, சிவப்புக் கொடிகளை வைத்துக் கொண்டு கார்டும் தயாராக இருந்தார். 'ஏன் இப்படி டிலே?' என்று என்னை நானே கேட்டுக் கொள்கிற மாதிரி முணு முணுத்துக் கொண்டேன். பக்கத்தில் அமர்ந்திருந்தவரின் பாம்புச் செவிகளில் அது விழுந்து விட்டது.

'மெயின் லேன் வண்டி வரலையில்லே?' என்றார் என் முணுமுணுப்புக்கு விடையாக.

''என்ன வண்டி?''

''விழுப்புரம் போகிற பாஸஞ்சர். அரை மணி லேட்டு. அவனுக்காகத் தான் இவன் காத்துக்கிட்டிருக்கான்...''

''ஓஹோ!''

இப்படிப் பேச்சு நடந்து கொண்டிருக்கும் போதே, 'அவன்' வந்து விட்டான். பரபரப்புடன் சில பிரயாணிகள் இறங்கி வந்து, நாங்கள் உட்கார்ந்திருந்த 'பிராஞ்ச் லேன்' வண்டியில் ஏறினார்கள். இனி, 'இவன்' புறப்பட வேண்டியதுதான்!

ஆயிற்று. கார்டும் பச்சைக் கொடியைக் காட்டிவிட்டார். இஞ்சின் கூவியது. 'குப் குப்' என்று புறப்பட்டு விட்டது.

அடடா, இது என்ன?

''ஜாக்கிரதை, ஜாக்கிரதை. பார்த்து ஏறுங்கள். பெட்டி... பெட்டி... அதை இப்படிக் கொடுங்கள். பார்த்து... பார்த்து... காலை வைக்கணும். அப்பாடா... சரி, முதலில் உள்ளே வாருங்கள்.''

''ஏம்மா, சற்று முன்னும் வந்திருக்கக் கூடாது? இப்படியா, வண்டி நகர்ந்ததும் தொற்றிக் கொள்வார்கள்?'' என்று கேட்டார் வயதான ஒரு பிரயாணி.

வெறும் புன்னகை மட்டும் பதில்.

'படித்த பெண்ணாகத் தோன்றுகிறது. அதனால்தான் அசட்டுத் தைரியம்!...'

'துணிச்சல் வேண்டியது தான். ஆனாலும் இந்த மாதிரி விஷயங்களில் கூடாது!'

'அந்த ஐயா மட்டும் பெட்டியை வாங்கிட்டிருக்காட்டா, இந்த அம்மா பிளாட்பாரத்தில் விழுந்திட்டிருப்பாங்க.' — இந்த உரையாடல் விமரிசனங்களை யெல்லாம் அந்த நாகரிக நங்கை பொருட்படுத்தினால்தானே? கையில் வைத்திருந்த பிளாஸ்டிக் கூடையை மேல் தட்டில் வைத்துவிட்டு, கைக்குட்டையால், நெற்றியில் துளித்திருந்த வியர்வை முத்துக்களை ஒற்றி எடுத்தாள்.

எல்லாப் பிரயாணிகளும் — பெண்கள் உட்பட — அந்தக் குமரியை, வைத்த விழி வாங்காமல் பார்த்தார்கள். அப்படி ஓர் அழகு! அழகை மேலும் அழகு செய்வது போல் உடை, நடை, ஒப்பனை. பதினேழு, பதினெட்டு வயதில் பெண்கள் எல்லோரும் எப்படியோ அற்புதமாகத் தான் மாறி விடுகிறார்கள்! ஒவ்வோர் இமைப்பிலும் ஒரு ரகசியம்; செம்பவள இதழ்களைப் பிரிக்கும் போதெல்லாம் கிளுகிளுப்பு?...

''டிரெயின் ரொம்ப லேட்டா?''

என்னைப் பார்த்தா கேட்கிறாள்? அவளா? அவளுடைய பெட்டியை, உள்ளே வாங்கி வைக்கும் பேறு எனக்குக் கிடைத்ததோ, அவளா!....

''....ஹ.... இல்லே, இல்லே!.... இந்த வண்டியைத்தானே கேட்கிறீர்கள்?... அதிகத் தாமதம் இல்லே. பத்து நிமிஷம்தான் இருக்கும்....!''

''தட்'ஸ் ஆல்?''

''யெஸ்.....''

எந்த வகுப்பில் படிக்கிறாளோ? அதாவது கல்லூரியில் எந்த வகுப்போ? கணிதமோ, சரித்திரமோ?....என் அப்பாவும்தான் தலையில் அடித்துக் கொண்டார்—'படிடா, படிடா' என்று. படிக்கிற ஜன்மமா இது? தொல்லே தாளாமல் போய்ச் சேர்ந்தேன். ஹோஸ்டல் வாழ்க்கை. ஒரு தியேட்டர் பாக்கி



வில்லே !.... தெப்பக்குளத்தையும் சின்னக் கடைத் தெருவையும் சுற்றினேன். அப்படிச் சுற்றினேன்! மலைக்கோட்டையில் ஏறும்போது உண்டான உற்சாகம், கல்லூரிப் படிகளில் ஏறும்போது இல்லை!.... மூன்று மாதங்கள் கூட ஆகவில்லை, 'வார்டன்'இடம் சொல்லிக் கொள்ளாமலே மூட்டையைக் கட்டிக் கொண்டு வீட்டுக்குப் போய் விட்டேன். அப்பா, தலையில் அடித்துக் கொண்டார். மறுநாளிலிருந்து நான் வயற்காட்டுக்கு ஒழுங்காகப் போக ஆரம்பித்தேன். ம், நான் மட்டும் தொடர்ந்து படித்திருந்தால்...?

"டிக்கட்ஸ்...."

எடுத்துக் காட்டினேன்.

அந்தப் பெண்மணி எழுந்து பிளாஸ்டிக் கூடையை எடுத்தாள். எடுத்தவள் கையை உதறினாள். "மை காட்!"

"என்ன?" — என்னையறியாமல் கேள்வி வெடித்துக் கொண்டு வந்தது.

"ஒரு புஸ்தகம்....."

"பத்திரிகையா?"

"இல்லே.... டெம்பெஸ்ட்....."

அந்தப் பெயரை எங்கேயோ கேட்ட நினைவு. ஷேக்ஸ்பியரோ, பெர்னார்ட் ஷாவோ எழுதித் தொலைத்தது; அல்லது வேறு எவனோ?

டிக்கெட் பரிசோதகர் கேட்டார்.

"நான் டிக்கெட்டைக் கேட்கிறேன். புஸ்தகத்தை இல்லே!"

"எனக்குப் புரிகிறது, ஸார், புரிகிறது! ஆனால் டிக்கட் புத்தகத்தில் இருக்கிறது. புஸ்தகத்தைத்தான் காணவில்லை. அதை அந்த டிரெயினிலேயே வைத்து விட்டேன் போலிருக்கிறது......!"

"நோ.... நோ.... அப்படியானால் இப்பொழுது உங்களிடம் டிக்கெட் இல்லை...?"

"...... ....... ....."

என்ன பதிலைச் சொல்வாள் அந்தப் பெண்? 'டெம்பெஸ்டோ' என்னவோ சொன்னாளே, அதைப் படித்துக் கொண்டே வந்திருப்பாள், பிரயாணத்தின் போது. டிக்கெட்டை, பக்க அடையாளமாக வைத்திருக்கலாம். மெயின் லைன் வண்டியிலிருந்து அவசரம் அவசரமாக இறங்கி வந்து, இந்தப் பெட்டியில் ஏறும் பரபரப்பில், புத்தகத்தைக் கையோடு எடுத்து வர மறந்து போயிருக்கலாம்.....

"திருச்சியிலிருந்து நீங்கள் கட்டணம் செலுத்தியாக வேண்டும்—அபராதத்துடன்!"

அட கஷ்ட காலமே! புத்தகம் தொலைந்தது போதாதென்று, இது வேறு?....

"ஸாரி.... என்னிடம் அவ்வளவு தொகை இருக்காது...."

"அப்படிச் சொல்வதால் விஷயம் தீர்ந்து விட்டதாக ஆகாது, அம்மணி.... கண்டிப்பாய், நீங்கள் பணம் கட்டித்தான் ஆக வேண்டும்....."

ராதகன்! எவ்வளவு தீர்மானமாய், அழுத்தமாய் இரும்பாகப் பேசுகிறான்....! டிக்கட் வாங்காத பிரயாணி இல்லையே ?.... காசு கொடுத்து வாங்கிய டிக்கட்டைத் தவற விட்டு விட்டாள். அவ்வளவுதானே ?

"நான் டிக்கெட் வாங்கினேனே, ஸார், என் வார்த்தையில் நம்பிக்கை இல்லையா?"

கேட்டாளே, ஒரு கேள்வி! உன்னைப் பார்த்தால், டிக்கெட் வாங்காமல் பிரயாணம் செய்யும் பிரயாணியைப் போலவா இருக்கிறது? ஆளைப் பார்த்து எடை போடத் தெரியாதவர்களெல்லாம், தராதரம் அறியாதவர்களெல்லாம் உத்தியோகத் துக்கு வந்து விடுகிறார்கள்!

"நான் நம்புகிற மாதிரி ஒரு சாட்சியம் காட்டுங்களேன்...."

"எனக்கு அதெல்லாம் தெரியாது, ஸார்! திருச்சியிலிருந்து விழுப்புரம் போகும் பாஸஞ்சரில், கடைசிப் பெட்டியில் வந்தேன். புத்தகத்தைப் படித்துவிட்டு, மேல்தட்டில் தான் வைத்தேன். அதில் சந்தேகமில்லை. இந்த வண்டியைப் பிடிக்க வந்த பரபரப்பில், புத்தகத்தை மறந்துவிட்டேன்...."

"கடைசிப் பெட்டியில் எந்த இடம் என்று குறிப்பாகச் சொல்ல முடியுமா?"

"....வந்து.... முடியும். கடைசி பெஞ்சு!"

"சந்தேகமில்லையே?"

"இல்லே. வண்டி ஓடும்போது இரண்டொரு தடவை எழுந்து பார்த்தேன். நீண்ட இருப்புப் பாதை வேகமாய் ஓடுகிற மாதிரி இருந்தது !.... அப்புறம், ஏதாவது இஞ்சின் வந்து மோதினால், முதல் பலி நானாகத்தான் இருக்கும் என்றுகூட நினைத்துக் கொண்டேன்."

அச்சா, பேஷ்!.... அவள் பேசுவது உண்மையாக இல்லா விட்டால் இவ்வளவு இயற்கையாக, மனத்தின் அடித்தளத்திலிருந்து சொற்கள் வருமா, ஸார்......?

"ஆல்ரைட்..... நான் ரயில்வே டெலிபோனில் விசாரித்துப் பார்க்கிறேன். எதற்கும்..." என்றவர், ஒரு நிமிஷம் தயங்கி விட்டு, "பணத்தைத் தயாராக வைத்துக் கொள்ளுங்கள்!" என்று கூறி முடித்தார்.

அந்தப் பெண்ணுக்குச் சுரீரென்று பட்டிருக்க வேண்டும். எனினும், சாமர்த்தியசாலி அல்லவா ?

"புத்தகம் காணமற் போயிருந்தால் ?"

"அதைப் பற்றிப் பின்னர் யோசிப்போம்......." கோபித்துக் கொண்டு விட்டாற்போல் டக்கென்று டிக்கெட் பரிசோதகர் நகர்ந்தார்.

சில நிமிஷங்களுக்கெல்லாம் வண்டி நின்றது. சாலியமங்கலம். அந்த நிலையத்தில் 'கிராஸிங்'. எனவே, ஏழெட்டு நிமிஷங்களுக்கு வண்டி நிற்கும்.

டிக்கெட் பரிசோதகர் இறங்கி, ஸ்டேஷன் மாஸ்டர் அறையை நோக்கி நடந்தார்.

சும்மா போய் முயற்சி பண்ணுங்கோ, ஸார். கடைசியில் தோல்வி உங்களுக்குத் தான். நீங்கள் சட்டப்படி நடப்பதை நான் ஆட்சேபிக்கவில்லை. என்றாலும், மனத்தில் கொஞ்சம் சுவு இரக்கம் இருக்க வேண்டும் ; பொய் பேசுகிறவர்களையும் உண்மை உரைப்பவர்களையும் பிரித்து அறியும் கலை தெரிய வேண்டும், ஐயா!

அந்தக் குமரி, எங்கோ தொலைவில் கண்களைப் பதித்திருந்தாள் — தஞ்சாவூரில் பிரிந்து, மெயின் லைனில் செல்லும் வண்டியில் வைத்திருக்கும் 'டெம்பெஸ்டை'த் தேடுகிறமாதிரி!

எதிரில் வந்த வண்டி நின்று, தங்கி, புறப் பட்டுச் சென்றது.

அவர் வந்தார். அவர்தான் என்னமோ பிரமாதமாய், டிக்கெட்டுகளைப் பரிசோதிக் கிறாரே, அவர்.....! ஒருகால் மன்னிப்புக் கேட்க வரலாம். வரட்டும்.

''ப்ளீஸ்.... பணத்தைத் தருகிறீர்களா ?''

என்ன, என்ன.....?

''ஏன் ஸார் ?'' — பெண் கேட்டாள்.

''விசாரித்துப் பார்த்து விட்டேன்!....''

''ஓ.... புத்தகத்தை யாராவது எடுத் திருப்பார்கள்.''

அவர் — பரிசோதகர் கோபப்பட்டிருக்க லாம். படவில்லை. அவருடைய சொத்கள், ஒரு நயாபைசாகூடப் பெறுதலை என்பதற்கு, அசைக்க முடியாத ஆதாரம் தன் கைக்குள் அகப்பட்டிருக்கிற அகம்பாவம். அதைத் தேவைப்படும்போது, தேவையான அள வுக்கு உபயோகப்படுத்தும் அநுபவம்.

''பணத்தைக் கட்டுகிறீர்களா...?''

''நான்..... நான்..... வந்து....''

''நான்சென்ஸ்!.... கொடு, இப்படிப் பணத்தை......''

என்ன சொடுக்கு!.... அந்தப் பூ உடல் இதைத் தாங்குமா?.... ரொம்ப அநியாயம்!

ஆனால், அதிசயம்! பத்து ரூபாய்த் தாளைக் கொடுத்து, ரசீதையும் மீதியையும் பெற்றுக் கொண்டது!

எல்லாவற்றையும் நான் பார்த்துக் கொண் டிருந்ததை டிக்கெட் பரிசோதகர் கவனித் திருக்கிறார் போலும்! ''பரிவு காட்டத் தெரியாத பாதகன் என்றுதானே என்னைப் பற்றி நினைக்கிறீர்கள், மிஸ்டர் ?''

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது.

''நான் டெலிபோனில் விசாரித்தேன். மெயின் லைனில் போன அந்தப் பாஸஞ்சரில் கடைசி இரண்டு பெட்டிகள் பார்சல் பெட்டி களாம்!.... மேலே விளக்கம் வேண்டுமா?''

என்ன குறும்பு ஐயா, உமக்கு!

அதுதான் சொன்னேனே, இந்த நிகழ்ச்சி யைப் பற்றி எண்ணிப் பார்க்கும் போது, கூடவே, ஆச்சரியமான நினைப்பும் தோன்று கிறது என்று!



''தினம் இப்படித் தூக்கம் வராமல் இருக்கேனே, போன ஜன்மத்திலே டிக்கெட் பரிசோதகரா இருந்து ஆயிரக்கணக்கில் பிரயாணிகளின் தூக்கத்தைக் கலைத்து டிக்கட்டுகளைப் பரிசோதித்திருப்பீங்களோ ?'' V



மகன்: அப்பா! ரொம்பக் கவலையா இருக்கே! நான் பெயில் ஆகு ரொம்ப குறைஞ்ச மார்க் வாங்கியிருப் பேனோ! டுடோரியல் காலேஜிலே சேர்த்துப்பாளோ ?

தகப்பனார் : ....????.... V

சிரிக்க,

சிரிக்க!

A ''டேய் உங்க புது வாத்தியார் மனசிலே பதியும்படியா நன்றாச் சொல்லித் தர்றாராமே !''

''மனசிலே பதியறதோ இல் லையோ, முதுகிலே அவரு விரலும் நன்றா பதிஞ்சுடறது !''



A ''போடி அசடு! நான் நன்றாய்ப் படிக்கிறதில்லைன்னு பரிகாசம் பண்ணறியே. உன்னைப் போல வருஷம் பூரா படிச்ச பெயிலாவதை விட, என்னைப் போல பரீட்சைக்கு மூன்றுநாள் முந்தி நான் படிச்ச பெயில் ஆகிறது எவ்வளவோ மேல்!''





மலேசியப் பிரதமர் அளித்த விருந்துக்கு மாநாட்டுப் பெருமக்கள் பஸ்ஸிலிருந்து இறங்கி வரும் காட்சி

# மலேசியா மாநாடு

## சா. கணேசன் எம். எல். ஏ.,

ஏப்ரல் 16ஆம் மாலை நான்கு மணிக்கு தேசியப் பழம் பொருட் கூடத்தில் (National Museum) பொருட்காட்சித் திறப்பு விழா நடைபெற்றது. அதை மலேசியக் கல்வி அமைச்சர் திரு மகம்மது கிர் ஜொஹாரி திறப்பு விழாச் செய்தார். இந்தப் பொருட்காட்சி அமைந்திருந்த இடம் ஒரு பழம் பொருட்கூடமானதால் ஏற்கனவே அங்குள்ள பழம் நாணயங்கள், சிற்பங்கள், மலேயாவில் அகழ்ந்தெடுத்த பல கலைப் பண்டங்கள், மலேயாவின் இந்தியர்கள் பற்றிய படங்கள் முதலியவற்றுடன் கெடா, தைப்பிங், மலாக்கா, சிங்கப்பூர் முதலான ஊர்களில் உள்ள பழம் பொருட் கூடங்களிலிருந்து திரட்டிக் கொணர்ந்த பொருள்களும் நிரம்பி விருந்தன. இவற்றைக் காணும் பொழுது இன்னும் எத்தனை எத்தனையோ இடங்களில் புதை பொருள் ஆராய்ச்சி செய்தால் ஏராளமான பொருள்கள் கிடைக்கும் என்பது தெள்ளிதிற் புலனாகிறது.

உதாரணமாக, ஒன்றைக் காண்போம். கெடா மாநிலத்தில் மெர்போக் என்னுமிடத்தில் ஒரு மேட்டுப் பாங்கான இடத்தைத் தோண்டிப் பார்க்கும்போது ஒன்பது தளிகள் கொண்ட ஒரு கோயில் தென்பட்டது. அதை முற்றிலும் தோண்டி மண் மேலையெல்லாம் அகற்றிக் கண்டபோது அங்கு சிவன் பரிவார தெய்வங்களுடன் கோயில் கொண்டருளியிருந்தமை புலப்பட்டது. கணபதி முதலிய சிலைகள் காலதேவனின் கொடுமையில் உருக்கெட்டு நின்றன. அத்துடன் வலக் கரம் திரிசூலம் ஏந்தவும், இடக்கரம் தண்டாமரையைத் தாங்கவும், பத்மாசனத்தில் அமர்ந்த — சடாமகுடத்துடன் கூடிய — அம்பிகையின் திருவுருவம் ஒன்று, முற்றிலும் தங்கத்தாலானதாய்க் கண்டெடுக்கப்பட்டுள்ளது. அத்துடன் நல்ல வெள்ளியாலான நந்தியின் திருவுருவம் ஒன்றும் கிடைத்திருக்கிறது.

மலேயாவில் பல மாநிலங்களிலும் அகழ்ந்து காணப்பட வேண்டிய இடங்கள் பல இருக்

கோலாலம்பூரில் உள்ள தேசிய பழம் பொருட்கூடத்தின் முன் தோற்றம்



இன்றன. பேராக், பினாங்கு, மலாக்கா போன்ற மாநிலங்களில் தற்செயலாகக் கிடைத்த செப்புத் திருமேனிகள் பலவற்றைப் பல இடங்களில் பூஜையறையில் வைத்து வழிபடுவதை நாங்கள் நேரிலேயே கண்டோம். அவற்றுள் பௌத்தப்படிமங்கள் சிறிய வயப் புள்ளவைகளாய்க் காணப்பட்டன.

மலாக்கா நகரில் பழம் சுவர் ஒன்று கடலை நோக்கிக் கொண்டிருக்கக் காணலாம். அந்தச்சுவரில் மகரம் ஒன்று தண்டிகை போலப் பதிக்கப்பட்டிருப்பதை இன்னும் காணலாம்.

பொருட்காட்சியின் மற்றொரு பகுதி பல்கலைக் கழக நூலக மேல் மண்டபத்தில் அமைக்கப்பட்டிருந்தது. அதை நமது முதலமைச்சர் திரு பக்தவத்சலம் திறந்து வைத்தார். அதில் சுமார்



துணைவேந்தர் விருந்துக்கு முன்: கட்டுரை ஆசிரியர் கணேசன், அ. சி. ரா., ஞானசம்பந்தம், டி. கே. எஸ்., ராமநாதன் முதலியவர்கள்.



கெடாமாநிலத்தில் சிவன் கோயிலில் கண்டெடுக்கப்பட்ட வெள்ளியாலான நந்தி.



சீனன் அளிக்கும் பான வகைகளின் ஆராய்ச்சி நடக்கிறது.

இருநூறு புகைப் படங்கள் இடம் பெற்றிருந்தன. அப்படங்களில் சில எட்டு அடி உயரமிருந்தன. என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன். அவை முழுதும் தமிழக அரசு அனுப்பியவை. தொல்பொருள் இலாகாவின் தலைவர் திரு ஆர். நாகசாமி அதை அருமையாக அமைத்திருந்தார்.

அதை அமைப்பதற்கு அவர் பட்ட பாட்டை எவ்வளவு பாராட்டினும் தகும். மாநாட்டு நிர்வாகிகள் தங்கட்குள்ள பல சிரமங்களுக்கிடையில் இதை அமைக்க ஏற்படும் சிரமத்தையும் ஏற்றுக்கொள்ள முடியாதவர்களாகி விட்டார்கள். ஆனால் டான்ஸ்ரீ



தேசியப் பழம் பொருட் கூடத்திலுள்ள லெட்சுமியின் தங்கத் திருமேனி.

சம்பந்தமும் அவர் மனைவியார் புவான்ஸ்ரீ உமா சம்பந்தமும் இதை அமைக்கப் பேருதவி புரிந்தனர். அவர்களில்லாவிட்டால் நிச்சயமாக இதை அமைத்திருப்பது அரிது என்றுதான் சொல்ல வேண்டும்.

இப்பொருட்காட்சியில் ஒரு பகுதி பழம் புத்தகங்களுக்காக ஒதுக்கப்பட்டிருந்தது. அதில் மதுரைத் தமிழ்ச் சங்கப் புத்தகங்களும், பழம் புலவர் படங்களும் இடம் பெற்றிருந்தன. நுழைவாயிலைத் திருவாயிலிருபாலர் (துவார பாலகர்கள்) எட்டடி உயரத்தில் நின்று கொண்டு காத்து வந்தனர். உள்ளே கால வரிசையில் விமானங்கள் கோபுரங்கள் ஒருபுறம் காட்சியளித்தன. விமானத்தில் தஞ்சைப் பெருவுடையார் கோவில் விமானமும், கோபுரத்தில் திருவாரூர்க் கோபுரமும் தலைமை தாங்கின. மற்றப் பகுதிகளில் எல்லாம் சிலாமூர்த்திகளும், செப்புத் திருமேனிகளும் கொலுவிற்றிருந்தன.

தமிழர்தம் நாகரிகத்துக்கும் கலையுணர்வுக்கும் சமயப் பற்றுக்கும் ஒப்பற்ற எடுத்துக்காட்டுக்களாய் மிளிர்ந்த இவற்றைக் கண்டு பிற நாட்டினர் எல்லாம் வியந்ததைப் பார்க்கும்போதுதான் நம் கலைச் சிறப்பைப் பற்றி நம்மவர்களும் சிறிது மகிழவும் பெருமிதம் கொள்ளவும் முடிந்தது.

இவ்வரிசையில் இறுதியில் தமிழ்த் தாய் உலகமிசை வீற்றிருக்கும் வண்ணப் படம் காட்சி யளித்துக் கொண்டிருந்தது. அது காரைக்குடி கம்பன் கழகத்திலுள்ள செப்புத் திருமேனியின் வண்ணப் பட ஓவியமாகும். தமிழகத்தின் செப்புத் திருவுருவ வரிசையில் கடைசியாக இருக்கும் அது காலஞ்சென்ற சிற்பக் கலாசாகரம் ம. வைத்தியநாத ஸ்தபதியார் வடித்தளித்ததாகும்.

இத்தகு அருமையான பொருட்காட்சியை நமது முதலமைச்சர் அருமையான சொற்பொழிவாற்றித் திருவிளக்கை ஏற்றி வைத்துத் திறப்பு விழா ஆற்றினார்.

படங்கள் எத்துணை சிறந்தவையோ அத்துணை சிறந்தவையாக இருந்தது காட்சிக் கூடமும். அருமையான மண்டபம், சுமார் 8,000 சதுர அடி உள்ள அது முற்றிலும் குளிர்பதனம் செய்யப்பட்டிருந்தது. அது மாணாக்கர்கள் வந்திருந்து படிப்பதற்காகவும் குறிப்புகள் எடுத்துக் கொள்ளுவதற்காகவும் என்று ஒதுக்கப்பட்டதாம். தாற்காலிகமாகப் பொருட்காட்சிக்கு அதை நூலகத்தார் விட்டுத் தந்திருந்தனர். மண்டபத்துக்கேற்ற படம்; படத்திற்கேற்ற மண்டபம் என்னும் படி அருமையாகப் பொருந்தியிருந்தன இரண்டும்.

16–4–66 காலை தொடங்கி வைத்து நல்லுரையாற்றியதன் மூலம் மாநாட்டுக்குப் பெருமையளித்தார் மலேசியப் பிரதமர். அவ்வளவுடன் அமைய அவர் அன்புள்ளம் இடந் தரவில்லை. மாநாட்டைப் பெருமைப் படுத்தினால் மட்டும் போதுமா? வந்திருக்கும் பல்வேறு நாட்டுப் பெருமக்களையும் பெருமைப்படுத்தினாலன்றோ தமிழை மதித்துப் பெருமை செய்ததாகும் என்று எண்ணியிருக்கலாம் போலும். அன்று மாலை ஐந்து மணிக்கு மாநாட்டுக்கு வந்திருக்கும் பெருமக்கட்கென்றே ஒரு வரவேற்பை நடத்தினார்; அதுவும் பாராளு மன்ற இல்லத்தில். தேநீர் விருந்துதான். அவரவர் விரும்பியதை அவரவரும் எடுத்துக் கொண்டு, ஒருவருடன் ஒருவர் அளவளாவிக் கொண்டே நின்றுண்ணும் முறையில் அமைந்திருந்தது அது. புலால் உணவு வேண்டுவோர்க்கும் மரக்கறி உணவு வேண்டுவோருக்கும் விரும்பியது கிடைக்குமாறு அமைக்கப் பட்டிருந்தது. பான வகைகளும் அப்படியே. மது வகை வேண்டும் புலவர்கள் முடையின்றிப் பெறவும் வசதி இருந்தது. ''தேன் கடுப்பன்ன நாட்படு தேறல்'' என்ற வரையறை — திறனாய்வுகளை யெல்லாம் படித்து மகிழும் நம்மில் எத்தனை பேருக்குக் குடித்து மகிழும் பேறும் உண்டு?

விருந்தின் சிறப்பு ஒருபுறம் இருக்கட்டும்; அதன் விளைவு எத்துணை விழுமியது என்பது தான் பல்லோர் உள்ளங்களையும் இனிக்க வைத்தது. பண்டைப் பெருமன்னர்கள் அந்நாளில் நல்லிசைப் புலவர்களை எப்படி மதித்துப் பாராட்டியிருப்பார்கள் என்பது தான் என் மனத் திரையில் படமாடிற்று.

விருந்தருந்தியதும் நல்லதொரு நிகழ்ச்சி. நமது முதல்வர் — ஆம், தமிழகத்துப் பெருமக்களின் தலைமகனாராக வந்தவரல்லவா அவர்? — மலேசிய நாட்டுத் தந்தைக்கு ஒரு சிறந்த அன்பளிப்பு வழங்கினார். தமிழ் நாட்டின் சிறந்த கலைப் படைப்பான, தத்துவக் கருவூலமான ஆடவல்லான் (நடராஜன்) திருவுருவந்தான் அது. அன்பளிப்புச் செய்ய எண்ணியதைவிட அதற்கான ஒன்றைத் தேர்ந்தெடுத்த அருமையை எல்லோரும் பாராட்டினார்கள். பின்னர் மகாநாட்டின் சிறப்புக்கு அடிகோலிய தமிழ் அமைச்சர்களான டான் ஸ்ரீ சம்பந்தம், திரு மாணிக்கவாசகம் ஆகிய இருவரையும் ''அந்நாளில் தமிழுக்கும் தமிழ்ப் பண்பாட்டுக்கும் அருமைப் பணி புரிந்தவர்கள் சம்பந்தரும், மாணிக்கவாசகரும். அப்பெரியார்களின் திருப்பெயரைக் கொண்டு விளங்கும் அவ்விரு அமைச்சர்களும் இந்நாளில் இந்நாட்டில் தமிழ் வளர்க்கும் நல்லமைச்சர்களாக இருக்கிறார்கள்'' என்று தொடக்க விழாவின் போது பாராட்டியதுடன் அமையாது, அப்பாராட்டுதலுக்கு ஒரு வடிவம் கொடுப்பது போல, தஞ்சைப் பொறி ஓவியத் தாலங்கள் இரண்டினை இருவருக்கும் வழங்கி மகிழ்வித்தார் நம் முதல்வர்.

அன்றிரவு எட்டு மணிக்கு மலாயா பல்கலைக் கழகத்தின் கலைக் குடியில் துணைவேந்தர் இரவு விருந்தளித்தார். இவ்விருந்தில் ஓர் அற்புதம்! கறிவகைகள் பொரித்தும், அவித்தும் பக்குவம் செய்யப் பட்டிருப்பினும் உருமாற்றம் இல்லாத சிறப்பினை எப்படிச் சொல்ல வல்லேன்! சுமார் இரண்டு அடி நீளமும் முக்கால் அடி அகலமுமுள்ள மீன்கள் சாப்பாட்டு மேசைகளில் அழகான



அ. இராமன் B. E. (Hons)
MECHANICAL ENGINEER, TATANAGAR
தோற்றம்: 16-6-1943 - மறைவு: 17-5-1966

● எங்கள் அன்புச் செல்வன், அரும்பெறல் புதல்வன், பொறியியல் கலைத்துறை வல்லோன், டாடா இரும்பு உருக்கு இயந்திர சாலையில் (TISCO) அலுவல் பார்த்து வந்தவன் 17-5-66-ல் நண்பர்களுடன் டாடா நகர் யுனைடெட் கிளப்பிலிருந்த நீச்சல் குளத்தில் குளிக்கச் சென்றவன் இரக்கத்திற்குரிய வகையில் இறைவன் திருவடியடைந்தமை கேட்டு ஆற்றொணாத் துயருற்று வருந்துகிறோம்.

இத்துயரச் செய்தி பற்றி எங்களுக்கு நேரில் வந்து ஆறுதல் கூறியவர்களுக்கும் மற்றும் ஆறுதல் செய்தி அனுப்பிய உறவினர், நண்பர் முதலிய அனைவருக்கும் இதன்மூலம் எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

புதல்வனை இழந்து வருந்தும்
பெற்றோர்

பாண்டமங்கலம்
அக்ரஹாரம்
உறையூர்
திருச்சி - 3

திரு எம். பி. அருணாசலம்
திருமதி மீனாட்சி அருணாசலம்


ORIENT
ALL-PURPOSE

பனிக்குத் தட்டுக்களில் கிடத்தப்பட்டிருந் தன. விழித்த கண் விழித்தபடி இருந்தது. உடம்பு மின் விளக்குகளின் ஒளியில் மாறொளித்தன. அப்பொழுதுதான் பிடித்து வந்த மீன்கள் போலப் புத்தம் புதியன வாய்க் காணப்பட்டன. எல்லாம் பக்குவம் செய்யப்பட்டவையே என்பதைச்சிலர் அறியப் பலர் செய்து காட்டினர். நானென்ன செய்ய வல்லேன். ''ஆகா! அருமை அருமை'' என்று அவர்கள் சுவைத்துச் சொன்ன சொற் களை ருசித்துக் கேட்டுக் கொண்டிருக்கும் பாக் கியமே எனக்கும் என் ஒத்த நண்பர்களான மகராஜன், சீநிவாசராகவன், ஞானசம் பந்தம் முதலியோருக்கும் இருந்தது. இருக் கிறது.

மொத்தம் மாநாடு நடந்த நாள் ஏழு; விருந்துகளுக்கோ கணக்கில்லை. அழைப்பு அனுப்பி நடைபெற்ற விருந்து மட்டும் ஆறாகும். 17—4—66 மாலை 5—30 மணிக்கு இந்தியத் தூதுவர் மாநாட்டின் பிரதிநிதி மக்களுக்கு ஒரு தேநீர் விருந்தளித்தார். அன்று பானம் பரிமாறியவர்கள் யாவரும் சீனர்கள். அவர்களுக்கு ஆங்கிலமே தெரி யாது; மலாய் மொழியும் சீனமுமே பேசக் கூடியவர்கள். பானங்கள் நிறைந்த தட்டை ஏந்தி வருவார்கள். நம்மவர்கள் என்ன பானம் என்றறியாமல் மாறி மாறி 'கிளாஸ்'களைப் பார்ப்பார்கள். அவர்கள் புன்முறுவல் பூத்து எதையாவது எடுத்துக் கொடுப்பார்கள். நம்மவரில் ஒருவர் — குடியை விரும்பாதவர்— மடக்கென்று ஒரு வாய் குடித்துவிட்டுப் பட்ட பாட்டைப் பார்த்து இரக்கம் காட்டிய வரினும் ஏளனம் செய்தவர்களே அதிகம்.

19—4—66 மாலையில் ஐந்து மணிக்கு மெர்லின் ஹோட்டலில் நமது முதலமைச்சர் ஒரு விருந்தளித்தார். விருந்து நடைபெற்ற இடம் 'ட்ராகன் ஹால்' எனப் பெயர் கொண்ட ஒரு சிறு மண்டபம். சுமார் ஐந்நூறு பேர் கலந்து கொண்டனர். பெயருக்கேற்ப மண்டபத்தின் தூண்களும், சுவர்களும், மேல் தளங்களும் ராட்சதப் பூரான்களா கவே தங்க முலாம் பூச்சுடன் சித்திரிக்கப் பட்டிருந்தன. சீனர்களின் கைவண்ணமும் கலைப் பண்பும் தோன்றப் பெரும் பொருட் செலவில் அமைக்கப்பட்டிருந்தன.

எல்லாச் சிற்றுண்டிகளையும் ஏந்திக் கொண்டு சில மகளிர்கள் ஒவ்வொரு மேசைக் கும் அசைந்து வந்தனர். நண்பர்களான தெ. பொ. மீ., மகராசன் முதலியவர் களுடன் நான் அமர்ந்திருந்த மேசையில் ஸ்விட்ஜர்லாந்திலிருந்து வந்திருந்த கார்ல் ஏ. கெல்லர் (Carl a keller) என்ற தமி ழறிஞரும் வீற்றிருந்தார். சீனப் பெண்டிர் குழந்தைகள் அணிவது போன்ற கவுன்களை அணிந்துகொண்டு ஆடாமல் நகர்ந்து வரு வதைப் பார்த்துப் புன்முறுவல் பூத்து, ''பொம்மை வருகிறது போலிருக்கிறது இல் லையா?'' என்று தூய தமிழில் சொன்னார். நண்பர் மகராஜன் ''நன்றாகச் சொன் னீர்கள்!'' என்று பாராட்டுரை பகர்ந்து நெடுநேரம் கெல்லரின் சொல்லைச் சொல்லிச் சொல்லி ரசித்துக் கொண்டே இருந்தார்.




1924ஆம் ஆண்டு. சங்கீத மேதை காஞ்சிபுரம் நாயனாப் பிள்ளையின் இசைக் கச்சேரி நடந்து கொண்டிருக்கிறது. கலெக்டர் துரை இறுதிவரை கற்சிலையாய்ச் சமைந்து கச்சேரியைக் கேட்பதில் யாவரும் வியப்படைந்தனர். காரணத்தை வெள் ளைக்கார கலெக்டரே வாய் திறந்து சொன்னார்: நாயனாப் பிள்ளையை நோக்கி. ''நீங்கள் இவ்வளவு நேரமும் என்ன செய்தீர்கள் என்பது எனக்குத் தெரியாது. ஒரே ரகஸியமாக ஏதோ செய்துகொண் டிருந்தீர்கள் என்பதை மட்டும் உணர்ந்தேன். உங்களோடு கூடிச் செயல் புரிந்த 'வாத்திய வித்வான்களுக்கும் உங்களுக்கும் ஏதோ ஒரு விஷ யத்தை முன்னிட்டு அடிக்கடி கடுமையான போராட்டம் ஆரம்பமாகி, வர வர அது வலுப் பெறுவதைக் கண்டேன். கடைசியில் ஒவ்வொரு தடவையிலும் எல்லோரும் ஒன்று கூடுவதையும் கண்டேன். எனக்குப் பெரும் வியப்பாகவும் வேடிக்கையாகவும் இருந்தது. ஒன்று மட்டும் நிச்சயம். ரகளைக்கு அடிப்படையான இத்தனை விவகாரங்களையும் உள்ளடக்கிய மூளையை உடைய உங்கள் தலை சாமானிய மூளையதன்று. அது வெடிக்காமல் இருப்பதிலிருந்து அது கல்லா, இரும்பா என்று நான் வியந்த வண்ணமாக இருந்தேன்!''

ஆதாரம்: திரு எல்லார்வி எழுதிய குறித்த நேரம் என்ற நூல்.
அனுப்பியவர்: 'சிதம்பரப் பிரியா'

முதலமைச்சர் விருந்தில் கலந்து கொண்ட வர்கள் சிற்றுண்டியை விட இத்தகைய உரையாடல்களின், சுவையையே பெரிதும் அனுபவித்தனர்.

இந்தக் கெல்லர் இருக்கிறாரே சுமார் 45 ஆண்டு வயதினர். 'ஆஜானுபாகு' என்ன லாம். எப்பொழுதும் முறுவல் பூத்த முகத் தினர். சங்க நூல்களில் திளைத்தவர். திரு முருகாற்றுப் படைத் திறனாய்வு செய்து கொண்டிருக்கிறார். ஹிப்ரு, அராபி மொழி களின் பேராசிரியராக இரு பெரும் பல்கலைக் கழகங்களில் பணியாற்றி வரும் இவருக்குத் தமிழ் மொழியிலும் சங்க நூல்களிலும் உள்ள ஆர்வத்தைக் காணும்போது,

''நாமமது தமிழர் எனக்கொண்டு இங்கு
வாழ்ந்திடுதல் நன்றோ?''

என்னும் பாரதியின் வாக்குத்தான் நம்மை எல்லாம் குட்டிப் பேசுகிறது. (தொடரும்)

வீடுகளுக்கும் மற்றும்
உணவு விடுதிகளுக்கும்
ஓர் அரிய சாதனம்

# லீக்கோ

நவீன வீட்டு எரி பொருள்



சிக்கனமானது ● மற்ற எரிபொருள்களைவிட அதிக அனலை ஈந்து நீண்டநேர வெப்பத்தை கொடுக்கிறது ● புகையாதது ● எந்தரக அடுப்பினிலும் உபயோகப்படுத்தவல்லது.



சிறிய 'லீக்கோ' துண்டுகளை எடுத்துக் கொள்ளவும்.



பிறகு மெல்லிய அடுக்காக அடுப்பினில் பரப்பி வைக்கவும்.



வழக்கமான முறையில் எரிய வைக்கவும்.



சில நிமிடங்கள் கழித்து நன்றாக சுடர் விட்டவுடன் மேலும் வேண்டிய அளவு 'லீக்கோ' சேர்த்துக் கொள்ளவும்.






# 'லீக்கோ'
## நவீன வீட்டு எரி பொருள்

**நெய்வேலி லிக்னைட் கார்ப்பொரேஷன் லிமிடெட்,**
**நெய்வேலி-1**

FDS NLC 441 THA

# யாத்திரை

ஏ. எஸ். ராகவன்

வெறுப்பும் வேதனையும் நாணுவின் நெஞ்சைத் தின்றன. பாருக்குட்டியுடன் ஏற்பட்ட நட்பை ஆழ்ந்த அன்பில் கனிந்த உறவாக எண்ணியது எத்தனை பேதைமை! ஒரு நொடியில் அவன் அருகே வந்தவள் ஓரே நொடியில் விலகவும் கூடுமென்று அவனுக்குத் தெரியாமல் போயிற்றே! கோபால் யார்? அவனை எவ்வளவு நம்பியிருக்கிறாள் பாருக்குட்டி! வெளுத்ததெல்லாம் பால் என்று நம்பலாமா? மாமா சொல்லவில்லையா? அடேயப்பா, அவருக்கு எத்தனை தீர்க்கதரிசனம்!

நாயரும் அவரைச் சுற்றியிருந்த பத்துத் தோழர்களும் நாணுவையே உற்றுப் பார்த்த வண்ணம் இருந்ததை முதலில் அவன் கவனிக்கவில்லை. சற்று நேரம் கழித்தே கவனித்தான். எதையோ மனத்தில் கொண்டு அவனைத் துழாவிய அவர்களின் பார்வைக்கு என்ன பொருள் என்று அவனுக்கு விளங்கவில்லை.

அதை ஆராய நேரம் கிடைக்கவில்லை. நாலைந்து போலீஸ்காரர்கள் உள்ளே நுழைந்தார்கள். "மிஸ்டர், நாராயண்! உங்களைச் சோதனையிட வேண்டியிருக்கிறது ..... எங்களுக்குச் சிரமமில்லாமல் செய்வீர்களா?" என்று கேட்டார்கள்.

நாணு ஒருகணம் திகைப்புற்றாலும் மறுகணமே நிதானித்துக் கொண்டான். "தாராளமாகச் சோதனை செய்து கொள்ளுங்கள்" என்றான்.

அவனுடைய சட்டைப் பை, மேஜை யறை, அலமாரி, தோல் பை எல்லாவற்றையும் சோதித்தார்கள் அவர்கள். தாங்கள் தேடியது அகப்படவில்லையோ என்னவோ, வெறுங்கையுடன் திரும்பினார்கள்.

"என்ன விஷயம், நாராயண்?" என்று கேட்டார் நாயர்.

"நான் உங்களைக் கேட்க எண்ணினேன், நாயர். மடியில் கனமில்லாதவனுக்கு அது எதுவாக இருந்தாலென்ன?" என்றான் நாணு.

"சூப்ரெண்டு இரண்டு தடவை போன் செய்தார்" என்றார் அவர்.

"அப்படியா?"

"குஞ்சுராமனும் கோபாலும் உங்களைப் பற்றிப் புகார் செய்திருக்கிறார்களாம்."

"என்னைப் பற்றியா?" என்று நாணு வியப்புடன் கேட்டான்.

"ஆமாம்...."

இதற்குள் டெலிபோன் ஒலித்தது. போலீஸ் மேலதிகாரியே நாணுவுடன் பேசினார். "மன்னியுங்கள். மிஸ்டர் நாராயண்.... ஒரு ரிப்போர்ட் வந்தது உங்கள் மீது. ஆகவேதான் சோதனைக்கு ஆளை அனுப்பினேன். அது சரி. அந்தக் குஞ்சுராமன் யார்?" என்று கேட்டார் அவர்.

"என் நண்பர்" என்றான் நாணு.

"கோபால்?"

"நண்பரின் நண்பர்."

"இந்நூறு ரூபாய் பணம் தந்தானமே, குஞ்சுராமன் உங்களிடம்?"



நாணு திகைத்து விட்டான்.

''மில்லில் வேலை வாங்கித் தருவதாகச் சொல்லி லஞ்சம் கேட்டார்களாம்... நூறு ரூபாய் நோட்டுக்களாக ஐந்து கொடுத்தானும் உங்களிடம்..... நோட்டில் கையெழுத்துக் கூடப் போட்டிருந்தானும்.....'' அவர் சிரித்தவாறே தொடர்ந்தார். ''மிஸ்டர் நாராயண்! ஆனால் அவன் சொன்ன கவரும் ஐந்து ரூபாய் நோட்டுக்களும் குஞ்சுராமன் வீட்டிலேயே இருந்தனவாம். அவர்களையும் அழைத்து வந்திருக்கிறார்கள்.''

''எதற்காக?.... பணம் அங்கேயே இருப்பதால் அவர்களை விட்டு விடலாமல்லவா ?''

''அதை யோசித்துத்தான் செய்ய வேண்டும், மிஸ்டர் நாராயண். அவர்களிடம் எனக்குச் சந்தேகமாக இருக்கிறது.''

ஒரு நொடிப் பொழுதில் நிலைமை விளங்கி விட்டது நாணுவுக்கு. பாருக் குட்டியின் முகமே கண் முன் நின்றது. ''ஸார்! அவருடைய அறியாமையை மன்னித்து விடுங்கள். உண்மையில் இந்தச் செய்தி எனக்கு ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. குஞ்சுராமன் எனக்குக் கடன்பட்டிருப்பதைவிட நான் அவருக்கு அதிகம் பட்டிருக்கிறேன், ஸார். ஏன் தெரியுமா ? அவர் மனைவி பாருக் குட்டி ஒரு வஞ்சனையற்ற பிறவி. அவளை முன்விட்டே அவரும் எனக்கு நண்பரானார்'' என்றான்.

அவனுடைய முறையீட்டை அவர் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. போனைக் கீழே வைத்து விட்டார்.

நாயர் கோஷ்டிக்கு விழி பிதுங்கிப் போய் விட்டது. காதுகள்கூடத் தொய்ந்துபோயின. தங்கள் எதிரே அமர்ந்திருப்பவன் புடமிட்ட பொன்னாக அல்லவா இருக்கிறான்! கையும் களவுமாக அகப்பட வேண்டியவன் எப்படித் தப்பினான் !

இது அவர்களுக்குப் புரியவில்லை. அவர்களுக்கு மட்டுமா, நாணுவுக்கும் அது ஆச்சரியமாகத்தான் இருந்தது. பணத்தை எடுத்து வராமல் இருந்தானே, அது கடவுள் செயல். ஆமாம், பூஜை மாடத்தில் அல்லவா அதை வைத்து விட்டு வந்தான்! 'கடவுளே, இது உன் பொறுப்பு'' என்று சொல்லிவிட்டு வந்தது போல் ஆகிவிட்டது.

அங்கிருந்து புறப்பட்டான் நாணு. நேரே போலீஸ் நிலையத்துக்கே போவதாகத் தான் எண்ணினான். ஆனால் அங்கே போவதால் பொய்யான புகார் தந்ததாகக் குஞ்சுவின் மீதும், கோபால் மீதும் வழக்குப் பதிய வேண்டுமென்ற நிர்ப்பந்தம் வரலாமென்று தோன்றவே பாருக்குட்டியையாவது பார்த்து ஆறுதல் கூறி வரலாமென்று எண்ணினான். எண்ணினானே தவிர, அங்கு செல்லவும் மனம் வரவில்லை. அவனுக்காகத் தொலைவிலிருந்தே அவள் அனுதாபப்படலாம். அவ்வளவே. நெருங்குவதால் தீமையே விளையுமென்று உள் மனம் சொல்லிற்று. குஞ்சுவும் கோபாலும் வஞ்சனையே உருவானவர்களாக அல்லவா இருக்கிறார்கள்! எத்தனை சாமர்த்தியமாக அவனை வளைக்கப் பார்த்தார்கள்! வீட்டுக்குத் திரும்பவும் பிடிக்கவில்லை. இவ்வாறே ஒரு குறிப்பும் இல்லாமல் சிந்தனையின் அலைகளைப் புரட்டியவாறே அவன் நடந்தான். அந்தப் பணத்தை எடுத்து வந்திருந்தால் என்னவெல்லாம் நடந்திருக்கும் என்பதைக் கற்பனை செய்யவே முடியவில்லை.

கடவுளே! என்ன மனிதர்கள்! அன்பே, நீ ஏன் இத்தனை மாயம் செய்கிறாய்?





## உங்கள் குழந்தையை ஆரோக்கியமுடன் குதூகலமாக வைத்திருக்க உறுதுணை

# உட்வர்ட்ஸ்

குடல் வலி, புளிப்பு, உப்புசம், பல்முளைப்புப் பருவக் கோளாறுகள் ஆகியவற்றிலிருந்து உடனடி நிவாரணம் தருவது உட்வர்ட்ஸ். எப்போதும் உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டர் உங்கள் வசம் இருக்கட்டும்.




100 ஆண்டுகளுக்கு மேலாக புத்திசாலித் தாய்மார்களால் உபயோகிக்கப் பட்டுவருகிறது.

LPE Aiyars. F. 10 TM

''நீங்களா!''

குரல் வந்த திசையில் திரும்பிப் பார்த்தான் நாணு. சீதா நின்று கொண்டிருந்தாள் முன் முகப்பில்.

''அப்பா இருக்கிறாரா?'' என்று கேட்டான் நாணு.

''இருக்கிறார், வாருங்கள்......'' என்றாள் அவள்.

அவன் உள்ளே சென்றான். கனத்த புத்தகமொன்றில் ஆழ்ந்திருந்த வக்கீல் மாமா — ஜட்ஜ் மாமா — அவனைப் பார்த்ததும், ''வாப்பா, சுந்தரியின் பிள்ளை!....டக்கார்... குப்புசாமியின் வழக்குத்தான் முடிந்து போயிற்றே..... இப்போது ஏதாவது புதிதாக வந்திருக்கிறதா?'' என்று கேட்டார்.

''ஆமாம்'' என்றான் நாணு.

''முன்பு தலையில் அடித்தான் அவன், வழக்கையே மாற்றி அவனுக்கு விடுதலை வாங்கித் தந்தாய்..... இப்போது அடி எங்கே பட்டிருக்கிறது ?''

''நெஞ்சில்'' என்றான் அவன்.

ஜட்ஜ் சிரித்தார். ''நெஞ்சில் அடிபட்டால் வழக்கு கோர்ட்டுக்கு வராது'' என்றார்.

நாணு சிரித்தான். ''திருமணப் பிரச்னை இல்லை, மாமா.....'' என்றான்.

''நீ இல்லை என்றால் ஆயிற்றா? உனக்காகக் கியூ வரிசையில் நிறுத்தி விசுவநாதன் செலக்ட் செய்வார். தெரியுமா ?''

நாணு தலையைத் தாழ்த்திக் கொண்டான். விசுவநாதன் அப்படியொரு சுயம்வரம் நடத்தக் கூடியவர்தான். லட்சுமி அம்மாள் அவனுக்காக ஓர் அரச குமாரியையே தேர்ந்தெடுப்பாள். அவனைப் பொறுத்தவரை எந்தப் பெண்ணும் அவனுடைய நெஞ்சில் கலக்கவில்லை. தனக்கு வரப் போகிற துணைவிக்கு என்னென்ன இலட்சணங்கள் இருக்க வேண்டுமென்றும் அவன் கனவு கண்டதில்லை.

''நாராயணன், ஏன் திடீரென்று மௌனமாகி விட்டாய்?'' என்று ஜட்ஜ் கேட்டார்.

''ஒன்றுமில்லை.....'' என்றான் அவன்.

''ஏதோ வழக்கு என்றாயே, என்ன அது?'' என்று கேட்டார் அவர்.

அவரிடம் நடந்ததை யெல்லாம் சொன்னான். கேட்டுப் பிரமித்துப் போனார் அவர். ''கடவுள்தான் உன்னைக் காப்பாற்றினார். பெரிய ஆபத்திலிருந்து தப்பித்துக் கொண்டாய் போ..... குஞ்சராமனை ஒரு மிரட்டு மிரட்டி அனுப்பி விடுவார்கள்.... நீ மான நஷ்ட வழக்குத் தொடராதவரை, இது முற்றுவதற்கு வழியில்லை. ஆனால் நீ அவர்களுடன் பேசாதிருப்பது நல்லது'' என்றார்.

சீதா காப்பி கொண்டு வந்து கொடுத்தாள்.

''கமலா வேலூர் போய்விட்டாள். இவளுக்குப் பொழுது போகவில்லை. உள்ளுக்கும் வாசலுக்குமாகத் தவிக்கிறாள்...'' என்றார் ஜட்ஜ்.

''ஏன்? பாடினால் பொழுது போகுமே!'' என்றான் நாணு.

''நான் முழுதும் பாட முடியுமா?...ஏதாவது சினிமா, நாடகம் தவிர நம் தேசத்தில் பொழுது போக்க இடம் இல்லையே!''



**மாற்றுப் பெயர்களுக்கு விடை**

1. மைசூர் : 2. பஞ்சாப் : 3. பீஹார் : 4. நாகலாந்து : 5. பர்மா.

''ஏன் இல்லை? கோவில் இருக்கிறதே!''

''சபாஷ்! இந்தப் பதிலைச் சொன்னதற்காக உனக்கு என்ன தரட்டும்?''

''நீங்கள் ஜட்ஜ் ஆயிற்றே, தண்டனை தராமல் இருந்தால் சரி.''

அவர் சிரித்தவாறே, ''ஒரு ஜட்ஜால் வெகுமதியும், நஷ்டஈடும்கூடத் தர முடியும், தெரியுமல்லவா?'' என்றார். பிறகு சீதாவைப் பார்த்து, ''சரி, சீதா. தண்டனையைத் தருவோம். முதலில் ஒரு பாட்டுப்பாடு'' என்றார்.

அவள் பாடினாள். வீணையும் கையுமாக அவள் அமர்ந்திருந்த கோலம் வாணியே வீற்றிருந்தாற் போலிருந்தது. குரலில் அமுதைக் குழைத்தாள். தமிழைக் குழைத்தாள். ராகம் என்ற பசையில் சொல் என்ற முத்துக்களைக் கோத்துக் காதில் குண்டலமாகச் சூட்டினாள்.

நாணு மெய் மறந்து கேட்டுக் கொண்டிருந்தான். வேலூரில் கமலாவின் அறையில் கேட்ட குரலில் இப்போது செழுமையும், ரகசியமும், புல்லரிப்பும் கூடியிருந்தன.

பாடல் நின்றதும் மீண்டும் சூனியமே கவ்விற்று நெஞ்சை. அங்கும் இருப்புக் கொள்ளவில்லை. நெஞ்சு கைத்தால் அமுதமும் கசக்குமோ! பேரூர் போய் இறைவனை வணங்கி வரலாமென்று தோன்றிற்று. அப்போதாவது மனத்துக்கு ஆறுதல் கிடைக்காதா?

ஏன் இப்படி? ஓர் ஏமாற்றம், அவனை இத்தனை தூரம் அலைக்கழிக்கிறதோ?

பேரூர் புகழ்பெற்ற தலம். அங்கு கோவில் கொண்டுள்ள பெருமானின் பெருமை மிகவும் பெரிது. பிராகாரத்தை வலம் வந்தவன் அங்கே ஓர் இடத்தில் சிற்பத்தை ரசித்த வண்ணம் ஜெகு நிற்பதைக் கண்டான்.

''ஜெகு! நீ ஊருக்குப் போவதாகச் சொன்னாயே?'' என்று கேட்டான்.

''போகத்தான் போகிறேன். மனசு சரியாக இல்லை. உன்னையும் வீட்டில் போய்த் தேடிவிட்டு இங்கே வந்தேன். நாராயணா, இந்தச் சிற்பத்தைப் பார். இவ்வளவு அழகாகப் பெண்கள் இந்தக் காலத்திலே பிறக்கவே மாட்டார்களோ? என்ன அழகு; என்ன ஒயில், என்ன இளமை பார்த்தாயா?'' என்று சிலையிலிருந்த பெண்ணை வியந்து ஜெகு பேசினான்.

நாணு சிரித்தான்.

''ஒரு நாட்டிய நாடகம் தயாரித்து அதிலே இப்படி ஒரு போஸ் கொடுத்தால் போதும்... லட்சம் லட்சமாய்ப் பணம் சேரும்.''

''லட்சம் லட்சமாய்ப் பணம் சேரும் ஜெகு. ஆனால் மன அமைதி போய்விடும். பணத்தை வைத்துக் கொண்டு என்ன செய்வது?'' என்று கேட்டான் நாணு.

# காம்பஸ் எறும்புகள்

ஆஸ்திரேலியாவில் 'காம்பஸ்' என்ற எறும்புகள் உள்ளன. இவை கட்டும் புற்றுக்களின் நீண்ட பாகம் தெற்கு வடக்கில் நேராக அமைந்திருக்கிறது. பூமியின் காந்த சக்தி துருவ மண்டலத்தை நோக்கி நிற்பது போல, இந்த எறும்புகளின் புற்றுகளும் நேர்த் தெற்கு வடக்காக நீண்டு இருப்பதால் இந்த எறும்புகள் 'காந்த எறும்பு', 'காம்பஸ் அல்லது மெரிடியக் எறும்பு' என்று அழைக்கப்படுகின்றன.

தகவல்: 'தேவி'

---

"ஏன், இதைப் போல் ஒரு கோயில் கட்டி விடுவது?"

"ஜெரு!" நாணு கூவியே விட்டான். ஜெருவா பேசுகிறான்? அவனுடைய மனமாகிய முரட்டுப் பாறையில் இந்தச் சிற்பம் எப்போது வெளிப்பட்டது! யார் செதுக்கினார்கள் அதை!

மனிதர்களுக்குள்ளே ஆயிரம் உணர்ச்சிகளை வைத்தே படைப்புத் தொழிலில் விநோதங்களைப் பிரமன் உண்டாக்குகிறான் போலும்! இல்லாவிட்டால் ஜெருவிடம் கூட ஒரு புது மலர்ச்சி உண்டாகுமா?

ஆனால் இதையெல்லாம் உணராத ஜெரு தன் போக்கில் பேசலானான். "ஜெயசூரியா என்று ஒரு புதுமுகம் வந்திருக்கிறான் திரை வானில். அவனைக் கொண்டு ஒரு நாட்டிய நாடகம் தயாரிக்கப் போகிறேன். நாராயணா... அடுத்த தடவை வரும்போது பார்..." என்றான்.

"அதிசயங்களை மேடையாக நிறுத்திக் கொள்ளாதே, ஜெரு... வாழ்விலும் கொஞ்சம் காட்டு" என்றான் நாணு.

"அது முடியாது. என் 'லைஃப்' தனி ரகம்" என்று உதட்டைப் பிதுக்கினான் ஜெரு, ஆற்றாமையோடு.

பேசியவாறே இருவரும் கோவை வந்தனர். வழக்கமான பல்லவியை ஆரம்பித்து விட்டான் ஜெரு. "நீ அதிர்ஷ்டக்காரன், நாணு. எந்தப் பெண்ணும் என்மீது அன்பு காட்டவில்லை" என்று பொருமினான்.

"அதற்குக் காரணம் நீதான்" என்றான் நாணு.

"நானு?... வாட் டு யூ மீன்?"

"மீனுமில்லே, இமிங்கிலமுமில்லே... கண்ணாடியில் தெரிவது நம்முடைய முகம்தானே, ஜெரு? அது போலப் பிறர் அன்பு காட்டுவதும் காட்டாமலிருப்பதும் நம் மனத்தளவு தான். நீ சிரித்தால் கண்ணாடியும் சிரிக்கும். நீ அன்பு காட்டினால் உலகம் உன்னிடம் அன்பு காட்டும்."

"இது நல்ல தியரிதான்."

"இது தியரி இல்லே... உண்மை."

"இருக்கலாம். ஹேவ்லாக் எல்லிஸ்கூட இதையேதான் சொல்கிறார்."

"அது யார் ஹேவ்லாக் எல்லிஸ்?"

"ஒரு பெரிய மனத்தத்துவ நிபுணர்.... செக்ஸ் என்கிற ஆண் பெண் உறவுத் தத்துவங்களை அக்கு வேறு ஆணி வேறாக அலசி முடித்த மகான்."

"ஓஹோ!"

"வாஸ்தவம்தான், நாணு. நான் போலி அன்பு காட்டிப் பழகி வந்திருக்கிறேன் என்பது இப்போதுதான் புரிகிறது. சீக்கிரமே இந்த வேலைக்குத் தலை முழுக்குப் போட்டுவிட்டு, லைஃபை ஒரு நிலைக்குக் கொண்டு வருவதென்று முடிவு செய்து விட்டேன்."

"வேலைக்கு முழுக்குப் போடாமல் அதைச் செய்யேன்."

"சா! இந்தவேலையை எவன் பார்ப்பான்?"

"அப்படியல்ல. விசுவாசமாகவும் பக்தியோடும் எந்த வேலை செய்தாலும் அதுவே உயர்வு தரும்... ஆடு போல் ஒன்றிலிருந்து ஒன்றுக்குத் தாவுவது தவறு."

"நாராயணா, நீ உபதேசம் செய்யப் புறப்படு. அதுதான் உனக்கு லாயக்கு." ஜெரு சிரித்தான். "அது சரி, இவ்வளவு தெரிந்து வைத்திருக்கிறாயே, யாரையாவது காதலியேன். அந்தக் காதல் அழகாக இருக்குமே!" என்றான்.

நாணு சிரித்தபடியே அவனிடமிருந்து விடைபெற்றான். அவன் காதலிப்பதா? இரு முனைகளில் பட்ட அநுபவத்திலிருந்து பெண்களை நினைக்கவே அச்சமாக இருந்தது. தவிரவும் காதல் அவஸ்தை அவனுக்கு எதற்கு? வாழ்வு ஓடுகிறதே தவிர, நிலைக்கவில்லையே! இன்னமும் அப்பா எங்கே இருக்கிறார் என்று தெரியவில்லை. அவர் மீது படிந்த கறை மாற வேண்டாமா? பிறந்து வளர்வதெல்லாம் ஏதோ ஒரு செயல் புரியவல்லவா? காதலும் கத்தரிக்காயும் எதற்காக? வருகிற காதல் வலிய வரட்டுமே, அவன் ஏன் தேடிப் போக வேண்டும்?

வீட்டை அடைந்தபோது அங்கே பாருக்குட்டி காத்திருந்தாள். முகமெல்லாம் வீங்கியிருந்தது அவளுக்கு. சிரித்த முகத்தில் துயரின் கோலம். அழவும் தெரிந்து கொண்டு விட்டாளே அவள்!

"போலீசில் அவர்களைப் பிடித்துக் கொண்டு போய் விட்டார்கள், நாராயண். விடுதலை செய்யச் சொல்லுங்கள்" என்றாள்.

"நான் சொன்னால் விட்டு விடுவார்களா, என்ன?" என்றான் நாணு.

"விட்டு விடுவார்கள்."

"உனக்கு யார் சொன்னார்கள்?"

"குஞ்சுராமன்தான்..."

"குஞ்சுராமன் பைத்தியக்காரர்... என் கையில் எதுவும் இல்லே. என்னையே அவர்கள் சோதனை போட்டு விட்டுத்தான் போனார்கள். இதோ பார், கடவுள் கையில் ஒப்படைத்து விட்டுச் சும்மா இரு. நடப்பது நடக்கட்டும்."

"உதவி செய்ய மாட்டீர்களா?"

"என்னால் ஆகாது, பாருக்குட்டி."

"கோபாலையும் விடமாட்டார்களா?"

# ஸில்வர் எக்ஸைட்

ஒவ்வொரு முறையும் உடனடியாக

என்ஜினைத் துவக்க




உங்கள் உள்ளூர் ஏஜண்டு:

**தி**

**ஜெனரல்**

**எலக்டிரிக் கோ. ஆப்**

**இந்தியா பிரைவேட் லிமிடெட். சென்னை**

கிளைகள்: பெங்களூர், கோயமுத்தூர், சிகந்தராபாத்

EBSC-65 TM

---

ஸ்ரீ கணேஷ்ராம்ஸ்




( Registered )

*Dhideerex*

(FOR INSTANT PREPARATION)

திடீரெக்ஸ்

திடீர்

**இட்லி–சாம்பார்** (2 தனி படிவங்கள்)

3 நிமிஷங்களில் தயார்!

**'மால்டைன்' (Maltine)**

தண்ணீரில் கலந்தவுடன் பருகக்கூடிய உணவு பானம்

சர்க்கரையோ, பாலோ தேவையில்லை

**ஊறுகாய்கள் - 14 இனுசுகள்**

**வத்தல், வடாம் - 14 ரகங்கள்**

**பப்படம், அப்பளாம் முதலியன**

எமது தயாரிப்புகள்

இந்த குறிப்பிட்ட

லேபிள்களிலும்

விற்பனையாகிறது




**ஸ்ரீ கணேஷ்ராம் & கோ.**

(போன்: 23665)

46, தம்பு செட்டித் தெரு, சென்னை-1

---

பண்டிட் டி. கோபாலாசார்லுவின்



# ஜீவாம்ருதம்

ஆரோக்யத்திற்கும் பலத்திற்கும்



**ஆயுர்வேதாஸ்ரமம்**

**பிரைவேட் லிமிடெட் சென்னை-17**

''அதுதான் அடிப்படையில் இதற்குக் காரணம் என்று எனக்குத் தோன்றுகிறது.''

''உக்கும்...அவர் நல்லவர்.''

''ஓஹோ! நான் பொல்லாதவனு, பாருக் குட்டி?''

''நீங்கள்....வந்து... நீங்களும் நல்லவர் தான்....ஆனல் மாறிவிட்டீர்கள். இப்போது நாயர்கூடச் சொன்னர். நீங்கள் குஞ்சுராமனைப் பழி வாங்காமல் விடமாட்டீர்கள் என்று...''

''நாயர் சொன்னரா?''

''நாராயண், நான் என்ன செய்வது?... தாத்தா வீட்டிலேயே இருந்திருக்கலாம். இங்கு வந்து அவதிப்படுகிறேன். என் சிரிப்பே மாறி விட்டது. கோபாலைக் காப்பாற்றுங்கள், நாராயண். அவரால்தான் குடும்பமே இங்கு வந்தது.''

நாணு முகத்தைத் திருப்பிக் கொண்டான். அவனுடைய பேதைமை பயங்கர எல்லையை எட்டி விட்டதென்றே தோன்றியது. அந்த எல்லையில் காலூன்ற அவளால் ஆகுமா? குஞ்சுராமனைப் போன்ற கணவனைப் பெற்ற துரதிர்ஷ்டம் போதாதென்று இந்த விபரீத அன்பு வேறு? ஆனல் அதைப் பற்றிக் கவலைப்படுவதற்கு அவனுக்கு என்ன உரிமை இருக்கிறது? பார்க்கப் போனல் அவன் மீது அவள் கொண்ட அன்பும் கூட இத்தகைய எல்லையைத் தொட்டதுதானே? அவனுக்கு அது சரியென்றல் கோபாலுக்கும் சரிதானே!

''பாருக்குட்டி, கவலைப்படாதே. அவர்கள் கட்டாயம் திரும்பி வருவார்கள். நான் வழக்குத் தொடரப் போவதில்லை. உனக்காக இந்த முடிவை நான் ஏற்றே தீருவேன். போய் வா'' என்றன் முடிவாக.

அவள் போனள்.

''ஊஹூம்... பழைய பாருக்குட்டி இல்லை அவள்! அந்தக் குழந்தை அல்ல அவள்! கழைக் கூத்தாடி குழந்தையின் எலும்பை யெல்லாம் முறித்து மூட்டையாக உருட்டுவானே, அப்படி இவளை மாற்றி விட்டார்கள். மாற்ற முடிந்ததே, அது விந்தைதான்! அன்புக்கும் அந்தச் சக்தி உண்டோ, என்னவோ! முழுதாகப் பற்றிக் கொள்ளும் நம்பிக்கையோடு படரும் அன்பு இவளிடம் உண்டல்லவா? அது சிலவற்றை நம்பிப் பற்றிக் கொள்ளுகிறது. பற்றி வளைக்கிறது. அதனல் மாற்றமும் விளைகிறது.' அவன் தனக்குள் சொல்லிக் கொண்டான்.

இரு வேறு குண மாறுதல்களை அவன் அண்மையில் காண நேர்ந்தது. ஒன்று ஜெருவிடம். மற்றொன்று பாருக்குட்டியிடம். அடிப்படையில் இருவரிடமும் மாறுதல்கள் இல்லையென்றலும் ஜெருவுக்கு விரக்தி கலந்த ஞானம் மெல்லத் தலை தூக்க ஆரம்பித்திருந்தது. பாருக்குட்டியிடம் குழந்தைத் தனத்தை மீறிய உலக ஞானம் தலைதூக்க ஆரம்பித்திருந்தது.

''குழந்தை, சாப்பிட வரவில்லே?'' என்றள் லட்சுமி அம்மாள்.

''எனக்குப் பசியில்லே அம்மா'' என்றன் அவன்.




* ஒரு பெரிய சாவிக் கொத்தை உள்ளே விட்டுவிட்டு வெளியே பூட்டிவிட்டதால் அவதிப்பட்ட ஒரு பெரிய பல அடுக்கு மாளிகையின் முதலாளிக்கு, பம்பாயில் ஒரு சாதாரணத் தொழிலாளி சாக்கடைக் குழாய் மூலமாக மூன்றும் மாடி வரை ஏறிச் சென்று உள்ளே குதித்துச் சாவிக் கொத்தை மீட்டு உதவி செய்தான்.

* லண்டனைச் சேர்ந்த மூன்று டாக்டர்கள் ஒரு நபரைச் சூதாட்ட வெறியிலிருந்து மீட்கப் புது வழி கண்டுபிடித்திருக்கிருர்கள். பத்திரிகையில் குதிரைப் பந்தயம் பற்றிய பகுதியை அவர் படிக்க நேரும்போது அவன் விலாப்புறத்தில் மின்சார அதிர்ச்சி தர ஏற்பாடு செய்திருக்கிருர்கள். உடனே அவன் புத்தி அந்தப் போட்டிப் பகுதியிலிருந்து தாவிவிடுகிறது. அதை அவன் மறந்து விடுகிறன்.

தகவல்: ''பரதேசி''

ஆதாரம்: ''தர்மயுக்''

அவள் அவனை மேலும் கீழும் பார்த்து விட்டு அருகில் வந்து, முகத்தில் கைவைத்து, ''அம்மாடியோவ்! கொதிக்கிறதே உன் உடம்பு!'' என்றள்.

''என் உடம்புக்கு ஒன்றுமில்லே...பேசாமல் போங்களேன்'' என்றன் சலிப்புடன்.

வேடிக்கை. அம்மாவிடம் சலிப்பும் கோபமும் வருவானேன்? சலிப்படைய வேண்டிய சந்தர்ப்பங்களிலும் கோபப்பட வேண்டிய சந்தர்ப்பங்களிலும் நிதானமாக இருந்து விட்டு வந்தவன், இங்கே அம்மாவிடம் பாய்வானேன்? அன்பு நிறையுமிடத்தில்தான் தாபத்தை வெளியிட முடியுமோ?

லட்சுமி அம்மாளுக்குக் கண் இலேசாகக் கலங்கி விட்டது. ''ஊரெல்லாம் ஏதோ ஒரு காய்ச்சல் வரதாம் இப்போது... வந்தால் இரண்டு மாதங்கள் ஆளை உருக்கி விடுகிறதாம்'' என்றள் ஆதங்கத்தோடு.

''அப்படி ஏதாவது வரட்டும். வீட்டை விட்டு வெளியே போகாமல் இங்கேயே இருந்தால் உன்னை விட்டுப் பிரியாமலாவது இருக்கலாம், பார்!'' என்றன் நாணு.

லட்சுமி அம்மாள் பெருமூச்சு விட்டாள். ''என்னவோப்பா, இரண்டு நாட்களா எனக்கு நல்ல கனவே இல்லே. உன் அம்மா வந்து வந்து வாசற்படியிலே நிற்கிற மாதிரியே இருக்கிறது. 'நான் அழைத்துக் கொண்டு போகப் போகிறேன், நான் அழைத்துக் கொண்டு போகப் போகிறேன்' என்று திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டே யிருக்கிறள்'' என்றள்.

நாணுவுக்கு இப்போது நிஜமாகவே காய்ச்சல் வந்தாற் போல் இருந்தது. குளிர் காய்ச்சல். உடம்புக்குள்ளே, எலும்புக்குள்ளே குளிர் உறைத்தது.

''போதாக் குறைக்குப் பத்மநாபனுக்கு வேறே உடம்பு சரியில்லே என்று கடிதம் வந்த

நாக டாக்டர் வீட்டுக் சொன்னார்கள். டாக்டர் புறப்பட்டுப் போயிருக்கிறாராம். என் கனவையும், பத்மநாபனின் வியாதியையும் நினைத்துப் பார்க்கப் பயமாக இருக்கிறது.''

நாணாவுக்கும் பயம் மட்டுமல்ல, விளக்க இயலாத வேதனையும் நெஞ்சில் வடிந்தது.

''அம்மா, நான் வேலூர் போய்விட்டு வரட்டுமா?''

''நானே சொல்ல வேண்டுமென்று நினைத்தேன், குழந்தை. அவசியம் நீ போய் வரத்தான் வேண்டும். அவன் உங்களுக்குச் செய்திருக்கிற உபகாரத்துக்கு உடம்புத் தோலைப் பாதரட்சையாகப் போட்டாலும் ஈடு ஆகாது'' என்றாள் லட்சுமி அம்மாள்.

ஆம். அவன் போய்த்தான் ஆகவேண்டும். நாணா முடிவு செய்து கொண்டான். பத்மநாப அத்தானைப் பார்ப்பதற்காக மட்டுமல்ல, பாருக்குட்டியிடமிருந்து விலகி ஓடுவதன் பொருட்டாவது அவன் வேலூர் போக வேண்டும்.

''வேலூருக்கா? நானும் வரேன்'' என்றான் ஜெரு மறுநாள் வந்து.

''நீ பட்டணம் போகவில்லையா, ஜெரு?''

''இல்லே. ராஜிநாமாவை அனுப்பிவிட்டேன். நாட்டிய நாடகம் அமைத்துச் சொந்தமாக ஒரு கம்பெனி நடத்துவதாகத் திட்டம் போட்டு முடித்தாயிற்று.''

''நிறைய மூலதனம் வேண்டுமே அதற்கு?''

''எவ்வளவு செலவானாலும் ஒரு நண்பர் உதவுவதாகச் சொல்லியிருக்கிறார்.''

''நல்லது. உன் முயற்சி வெல்க.''

''நீ தப்ப முடியாது. நாடக அமைப்பு உன் பொறுப்பு. பெரிய பேச்சாளன் ஆயிற்றே நீ!''

''நானா?''

''நீதான். பயப்படாதே.... ஒரு பழைய 'ஸ்கிரிப்ட்' இருக்கிறது. அதை இங்கேயும் அங்கேயும் மாற்றினால் தீர்ந்தது.''

''கேஸ் போட்டால் என்ன செய்வது?''

''அதெல்லாம் வராது. எந்த அப்பாவி எழுத்தாளன் கேஸ் போடுவான்? போட்டாலும் காபிரைட் விவகாரம் இலகுவில் ருஜுப்படாது.''

''ஜெரு, இது அநியாயம். என்னால் ஆகாது.''

''நீ ரொம்ப மானி... இன்னமும் மாறவே இல்லையே நீ. நாராயணா... தொழிற்சங்கத்திலே ஈடுபட்டு முதலாளி – தொழிலாளி விவகாரத்திலே எத்தனை பேர் காசு பண்ணுகிறார்கள், தெரியுமா?''

''எனக்கு அது தெரியாது. உண்மையான இயக்கவாதி செய்ய முடியாது அம்மாஞ்சி. ஜெரு, நல்ல நாடகமாகத் தயார் செய்யலாம். சொந்தமாகவே இன்றைய நிலையைத் தத்ரூபமாகக் காட்டி நாடகம் எழுதினால் ஒரு லட்சமல்ல, பல லட்சங்கள் வரும். லட்சியம் முக்கியம். உலகை ஏமாற்ற முயன்றால் நீ ஏமாந்து போகலாம்.''

''நாராயணா, நீ ஒரு வொண்டர்புல் மேன். இவ்வளவு விஷயத்தை எங்கே கற்றாய்?''

''உலகத்தில். உலகத்தை விடச் சிறந்த பள்ளிக்கூடம் எது?''

ஜெரு சிகரெட்டைத் தூர எறிந்துவிட்டு ஆகாயத்தையே பார்த்தான்.

எல்லையற்ற அந்தப் பெருவெளியில், சூனியத்தில் ஆயிரமாயிரம் நட்சத்திரங்கள் மிதக்கின்றன. ஒளியை உமிழ்கின்றன. சூரிய சந்திரர்கள் வலம் வருகிறார்கள். ஓர் அச்சோ ஆணியோ இல்லாமல் இத்தனை இரகசியங்கள் எப்படிச் சுழல்கின்றன!

ஆம். உலகைவிடச் சிறந்த கல்லூரி வேறில்லை. பார்க்கத் தெரிந்தவர்க்கு இதுவே தெளிவு தரும். காலம், வெளி என்ற கணக்கில் யாவும் சுழலும் வியப்பு புரியும். தெரியாதவர்கள் பேசும் வாதங்கள் வெறும் மயக்கமே.

''நீ மாறி விட்டாயே, ஜெரு!'' நாணா சிரித்தான்.

மறுநாள் நாணாவும், ஜெருவும் வேலூருக்குப் புறப்பட்டார்கள். அதே நேரத்தில் நாணாவின் தந்தை வேலூரிலிருந்து புறப்பட்டு அவனைக் காணக் கோவைக்கு வந்து கொண்டிருந்தார்! (தொடரும்)




(ரூபாய் தன் மதிப்பைக் குறைத்துக் கொண்டு விட்டது என்றுதெரிந்ததும், நானும் என் மதிப்பைக் குறைத்துக் கொண்டு விட்டேன்!)

இதனால் சகலமானவர்களுக்கும் தெரிவித்துக் கொள்ள விரும்புவது யாதெனில். ஜூன் மாதம் 6-ம் தேதி விடியற் காலை இரண்டு மணியிலிருந்து நான் என் மதிப்பைக் குறைத்துக் கொண்டு விட்டேன் என்பதாகும். என்னுடைய பணக் கஷ்டங்களைத் தீர்த்துக் கொள்வதற்கு இதைத் தவிர வேறு ஒரு வழியும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. ஜூன் 6ந் தேதி, 7ம் தேதிகளில் என் வீடு பூட்டப்பட்டிருக்கும். இந்த இரண்டு நாட்களிலும் கொடுக்கல், வாங்கல் எதுவும் இருக்காது.

என் மதிப்பை நான் பாதிக்குப் பாதியாகக் குறைத்துக் கொண்டு விட்டேன் என்று எல்லாருக்கும் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

இரண்டு மாதங்களுக்கொரு தடவை, வீட்டுக்காரர் பத்து நடை நடந்த பிறகுதான் வீட்டு வாடகை கொடுத்துக் கொண்டிருந்த நான், இனி நான்கு மாதங்களுக்கொரு தடவை வீட்டுக்காரர் இருபது நடைகள் நடந்த பிறகுதான் கொடுக்க இயலும். அந்த வாடகையையும் முழுசாகக் கொடுக்க முடியுமா, அல்லது பாதிதான் கொடுக்க முடியுமா என்று என் மனைவி கணக்குப் போட்டுக் கொண்டிருக்கிறாள். இத்தகைய கணக்குகளைப் போட என் மனைவிக்குப் பத்து நாட்களாவது பிடிக்கும். ஆகவே, இதற்கிடையில் அவளும் தன் மதிப்பைக் குறைத்துக் கொள்ளாமல் இருந்தால், பத்து நாட்களில் இது விஷயம் தெரிந்து விடும்.

இதுவரை வாரத்துக்கு ஒரு வேளை மட்டும் நண்பர்களின் வீடுகளில் சாப்பிட ஒப்புக்கொண்டிருந்த நான், இனி என் மதிப்புக் குறைந்து விட்டதால், வாரத்துக்கு இரண்டு வேளை நண்பர்களின் வீடுகளில் சாப்பிடத் தயாராக இருக்கிறேன் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். அதே சமயத்தில் நண்பர்களுக்கு ஓர் எச்சரிக்கை. முன்னெல்லாம் அவர்கள் ஒருவேளை எனக்கு விருந்து வைத்தால், நான் இன்னொரு வேளை அவர்களுக்கு விருந்து வைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் அவர்கள் இனி இரண்டு வேளைச்சாப்பாடு போட்டால்தான் என்னால் ஒருவேளைச் சாப்பாடு போட இயலும்.

என் உள்ளூர் மாமனார் நான் அடிக்கடி அவர் வீட்டுக்குச் செல்வதைக் கண்டு ஆச்சரியப்படுவார். நான் என் மதிப்பைக் குறைத்துக் கொண்டு விட்டதால் இனி மாமனார் வீட்டுக்குப் போவதைப் பற்றி யோசனை பண்ணப் போவதில்லை. அவர்களும் போன ஒரு மணிக்குப் பிறகு, காப்பி கொடுக்கலாமா, வேண்டாமா என்று தங்களுக்குள் மகாநாடு கூட்டிப் பேசிக் காப்பி கொடுத்தவர்கள். இனி இரண்டு மணி நேரத்துக்குப் பிறகு மகாநாடு கூட்டிக் காப்பி கொடுத்தால் போதும்.

பேரம் பண்ணாமல் சாமான் வாங்குகிறவர் என்று பெயர் எடுத்திருந்த நான் இனிஅப்படி இருப்பேன் என்று சொல்வதற்









## மாம்பழமும் மாமன்னரும்

தன் பரிவாரங்களோடு அந்த மரத்தடியின் தங்கியிருந்த அரசன் தலையில் எங்கிருந்தோ சிறு கல் ஒன்று வந்து விழுந்தது. அரசன் தலையைத் தடவிக் கொண்டான். அருகிலிருந்த காவலர்கள் இதைக் கண்டுவிட்டனர். கல் எறிந்தவனைத் தேடும் பணியில் ஈடுபட்டனர்.

அரசர் உடனே அரண்மனைக்கு அழைத்துச் செல்லப்பட்டார். அங்கு ஒரு தனி அறையில் அவரை ஒரு கட்டிலில் கிடத்தினர். ராஜ வைத்தியர் ராஜ வைத்தியத்தைத் தொடங்கி விட்டார்.

கல் எறிந்தவனைத் தேடிச் சென்ற காவலர்கள் அந்த மாமரத்தின் மறு பக்கம் மாம்பழம் ஒன்றைக் கடித்துத் தின்று கொண்டிருந்த ஒரு பிராமணனைக் கண்டார்கள். அவன்தான் கல் எறிந்தவன் என்பது நிதர்சனமாகத் தெரிந்து விட்டது அவர்களுக்கு. அவனை அழைத்துச் சென்று மந்திரியின் முன்னால் நிறுத்தினர். மந்திரி தீர்ப்புக் கூறினார். மரண தண்டனை என்று. தான் என்ன தவறு செய்தோம் என்று விளங்காத அந்த ஏழைப் பிராமணன் விழித்தான்.

மரண தண்டனை நிறைவேற்றும்படி முன் அரசனின் அனுமதி பெற வேண்டும் என்று ஒரு சட்டம். அந்தப் பிராமணனை அரசனிடம் அழைத்துச் சென்றார்கள். அரசர் அந்தப் பிராமணனைப் பார்த்தார்.

"எதற்காக இவரை அழைத்து வந்தீர்கள்?" என்று கேட்டார் அரசர்.

"அரசே! இவன்தான் உங்கள் தலையில் கல்லைப் போட்டவன்" என்றார் மந்திரி.

அரசர் அந்தப் பிராமணனை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தார்

"அரசே, பசியால் வாடிய நான் மாம்பழத்தைப் பெறுவதற்காகக் கல் வீசியது என்னவோ உண்மை. ஆனால் அது உங்கள் தலையிலும் விழுந்ததற்காக என்னை மன்னிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்" - மன்னன் முன் சாஷ்டாங்கமாக விழுந்தான் அந்தப் பிராமணன்.

"மரத்தின் மீது கல் வீசினாயே, உனக்கு என்ன கிடைத்தது?"

"இரண்டு பழங்கள் கிடைத்தன அரசே. என் பசிக்கு அவை போதுமானதாக இருந்தன."

சற்று நேரம் யோசனையில் ஆழ்ந்த அரசர் மந்திரியை அழைத்தார்.

"இந்தப் பிராமணனை விடுதலை செய்யுங்கள். அதுமட்டுமல்ல, இவனுக்கும் இவன் குடும்பத்துக்கும் நிறையப் பொருளை வாரி வழங்குங்கள்."

மன்னனுக்கு மதிதான் மாறிவிட்டதோ என்று கலங்கிய மந்திரி, மன்னனுடைய கட்டளை வார்த்தையைக் கேட்டதும் அப்படியே திகைத்துப்போய் நின்றுவிட்டார்.

"மந்திரி! கேவலம் ஒரு மரம், தன்மீது கல் எறிந்தவனுக்கு இரண்டு பழங்கள் கொடுத்தது. ஆனால் அந்த கல் என்மீது பட்டதற்கு, மா மன்னனாகிய நான் தூக்குத் தண்டனையா கொடுப்பது?" என்று கேட்டார் அரசர்.

(நீடாமங்கலம் கிருஷ்ணமூர்த்தி பாகவதர் பிரசங்கத்திலிருந்து)

தொகுப்பு: மயிலை மூர்த்தி

இல்லை. நிச்சயமாகப் பேரம் பண்ணுவேன். ஒரு கடைக்கு இரண்டு கடை போவேன். என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

என்னிடம் நன்கொடை வசூலிக்க வருகிறவர்களும், நான் என் மதிப்பைக் குறைத்துக்கொண்டு விட்டேன் என்று தெரிந்து கொள்ளட்டும்! முன்பெல்லாம் பத்து ரூபாய் கொடுத்த இடத்தில் இனி ஐந்து ரூபாய்தான் கொடுப்பேன். முன்பெல்லாம் மாதத்தில் பத்துப் பேருக்கு இல்லை என்று கையை விரித்திருந்தால் இனி இருபது பேருக்குக் கையை விரிப்பேன்.

தீபாவளி இனாம், பொங்கல் இனாம் இது விஷயங்களிலும் என் மதிப்புக் குறைவுதான். ஒரு ரூபாய் இனாம் கொடுத்த இடத்தில் இனி எட்டணாத்தான் கொடுப்பேன்.

என் பெண் அனு விஷயத்திலும் இனி என் மதிப்புக் குறைவுதான். இதுவரை அவள் தனக்கு என்ன வேண்டுமானாலும் சரி, டில்லியிலிருந்து ஒரு கடிதம் எழுதினால் சரி, அடுத்த தபாலில் அவள் கேட்ட சாமான் போய்ச் சேர்ந்து விடும். ஆனால் இனி அப்படி நடக்காது. ஒரு கடிதத்துக்கு அவள் இரண்டு கடிதங்கள் எழுத வேண்டும். அப்பொழுதும் அவள் என்ன கேட்டாளோ, அதில் பாதிதான் போய்ச் சேரும்.

இன்னும் ஒரு விஷயத்தைப் பற்றியும் நான் அனுவுக்கு ஓர் எச்சரிக்கை விடுக்க விரும்புகிறேன். முன்பெல்லாம் அவள் "டில்லிக்கு வாருங்கள், டில்லிக்கு வாருங்கள்" என்று பத்துக் கடிதங்கள் எழுதிய பிறகு தான் டில்லிக்குப் போவதென்று வைத்துக் கொண்டிருந்தேன். இனி அவள் பாதிக் கடிதங்கள் எழுதினால் போதும். உடனேயே போய் டில்லியில் நின்று விடுவேன். முன்பெல்லாம் டில்லிக்குப் போனதும், "ஏன்னா, சென்னையில் அம்மா தனியா இருப்பாளே!" என்று அனு நான்கு தடவை சொன்ன பிறகுதான் ஊருக்குத் திரும்புவது என்று வைத்துக் கொண்டிருந்தேன். இனி அவள் எட்டுத் தடவையாவது சொன்ன பிறகு தான் ஊருக்குத் திரும்புவது என்று வைத்துக் கொண்டிருக்கிறேன்.

ஆக, இப்படிப் பல துறைகளிலும், நான் என் மதிப்பைக் குறைத்துக் கொள்ளப் போகிறேன். ஆனால் ஒரே ஒரு விஷயத்தில் தான் நான் என்ன முயன்றாலும் என் மதிப்பைக் குறைத்துக் கொள்ள முடியாது என்று தோன்றுகிறது. அதுதான் என் மனைவி சரசு என்மீது வைத்திருக்கும் மதிப்பு. "நம் நாட்டுப் பெண்கள் அப்படித்தான் கணவன்மார்களை உயர்வாக மதிப்பார்கள்" என்று எனக்குச் சமாதானம் சொல்லாதீர்கள். அவள் என்னை அத்தனை குறைவாக மதிக்கிறாள் என்பதும், அதற்கும் குறைவாக மதிக்க இடம் இல்லை என்பதும், இத்தனை நாட்களாக என் கட்டுரைகளைப் படித்துள்ள உங்களுக்கு இன்னுமா தெரியவில்லை?

[ஆசிரியர் அவர்களுக்கு: என் மதிப்புக் குறைந்து விட்டது என்று வழக்கமாக அனுப்பும் சன்மானத்தில் பாதியை அனுப்பாதீர்கள்!]

PIOC/123 TM 9



# குறையிலேயே கண் என்பது உண்மையே

ஆனால் தரக்குறைவான யாதொரு பொருளை ஏற்க மறுத்து, குறிப்பிட்ட மூலப்பொருளே வேண்டுமென வற்புறுத்த நேரும் போதுதான் அப்படிச் செய்கிறோம்.

இல்லையேல், நிர்ணயித்த வகைகளில் இல்லாத எங்கள் தொழிற்சாலைகளின் தயாரிப்புகளையே நிராகரிக்க வேண்டிவரும் போதும் அவ்விதம் செய்கிறோம்.

அல்லது, நச்சீர்பாட்டுக்குத் தடையாகவுள்ள பழைய வழிகளில் ஈடுபடுவதை விடுத்து, எங்கள் பண்டங்களையும் செய்முறைகளையும் புதிய வகைகளில் பயன்படுத்தும்படி தொழில் துறையினருக்கு ஆலோசனை கூறுவது அவசியமாகும் சமயங்களில் அம்மாதிரிச் செய்கிறோம்.

இன்றேல், எங்கள் தயாரிப்புகளின் இறுதித்தரத்தில் எங்களுக்கே ஐயம் எழும்போது அவ்வாறு செய்கிறோம்—இத்தகைய தரப்பரிசோதனையே இடையறாது நடந்து வருகிறது. ஆம், குற்றம் காண்பதில் எங்களுக்குக் குறிதான்...ஏன், ஒரு விதமான வெறி என்று கூடக் கூறலாம்.

இந்தியன் ஆக்ஸிஜன் லிமிடெட் IOL




## அத்தியாயம் இருபத்தெட்டு

## படைவீரர் திருநாள்

**ம**கா நவமித் திருநாளுக்கே சிகரம் வைத்தாற்போல் விளங்குவது அதன் பத்தாம் நாள் ஊர்வலம்தான். ஒன்பது நாட்களிலும் இறைவனின் பெயரால் நடைபெறும் திருவிழா பத்தாம் நாளன்று பேரரசரின் பெருவிழாவாக மாறி முடிவது வழக்கம். விஜயநகரத்துக் குடிமக்கள் அனைவருமே சக்கரவர்த்தியை ஊர்வலத்தில் கண்டு களிக்கும் நாள் அது. அதோடு நகரத்துக்கு வெளியே திரண்டிருக்கும் நால்வகைப் படையினரையும் அன்றுதான் சக்கரவர்த்தி மேற்பார்வை விடுவார்.

ஒன்பதாம் நாள் இரவு கிருஷ்ண தேவராயர் ஏனோ விசுவநாதனைத் தம்மோடு அரண்மனையிலேயே தங்குமாறு பணித்தார். மறுநாள் அதிகாலையில் அவர் துயிலெழுந்து வந்தபோதுதான் விசுவநாதனுக்குக் காரணம் விளங்கியது. எழுந்து நடமாடவும் முடியாதவர் போல் விசுவநாதனை அருகில் அழைத்து அவன் தோளில் சாய்ந்து கொண்டார். அவர் தேகமெங்கும் நெருப்பாகச் சுட்டது.

விசுவநாதன் பதறித் துடித்தான். அந்த ஒன்பது நாள் நிகழ்ச்சி அவரை வெகுவாகப் பாதித்து விட்டது என்பது அவனுக்கு விளங்கி விட்டது.

''சக்கரவர்த்திகளே! இன்றைய ஊர்வலத்தையும், படைகளின் அணிவகுப்பையும் தங்களால் தாங்க இயலாது. ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள்'' என்று மன்றாடினான் அவன்.

சக்கரவர்த்தியோ தாம் அவற்றில் கலந்துகொண்டால்தான் உடல் நலம் தேறும் என்று பிடிவாதம் பிடித்தார். அரசியர் இருவருக்கும் அவர் ஆறுதல் கூறியது போதாதென்று விசுவநாதனுக்கும் ஆறுதல் கூறினார்.

''விசுவநாதா! இந்த ஆண்டுத் திருவிழா எவ்விதக் குறைபாடுமின்றி நிறைவு பெற வேண்டும். விழா தொடங்கிய நாளிலிருந்து நான் என் உடல் வலிமையால் நடமாடவில்லை. இறைவனளித்த மன வலிமையே என்னை இயக்கி வருகிறது. எப்படியாவது இந்த ஒரு நாளும் சிறப்பாகவே கழிந்துவிடுமென்றே நம்புகிறேன். இந்த உடலுக்கு வேண்டிய சக்தியை நம்முடைய குடிமக்களும் படைவீரர்களும் எனக்குத் தருவார்கள். அவர்களைக் காண வேண்டுமென்ற ஆவல்தான் இப்போது என்னுடைய உயிர் மூச்சாக இழைகிறது. ஆகவே, வெளியில் யாருக்கும் என்னுடைய நிலையைப் பற்றிக் கூறாமல், நீயும் உன்னைச் சித்தப்படுத்திக் கொண்டு விரைவில் புறப்படு!''

விசுவநாதன் அவசரம் அவசரமாகத் தன் மாளிகைக்குச் சென்று ஊர்வலத்துக்கான ஆடை அணிகளைப் பூண்டு அரண்மனைக்குத் திரும்பினான். அதற்குள் கிருஷ்ண தேவராயர் செய்து கொண்டிருந்த உற்சவத் திருக்கோலம் அவனுக்குக் கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. அப்போது அவர் நோய்வாய்ப்பட்டிருந்தார் என்பதை அவனால் கூடக் கண்டுபிடிக்க முடியவில்லை. சரிகை பளபளக்கும் வெண் பட்டு ஆடைகளே அவர் விரும்பி உடுத்தும் ஆடைகள். நவரத்தினங்கள் இழைத்த பொன் முடி சூடி, செங்கோலும், உடைவாளுமாக அவர் வீற்றிருந்த காட்சியை அப்படியே தன் நெஞ்சில் பதித்துக் கொண்டான் விசுவநாதன். ஏனோ அவனுக்கு அந்தக் காட்சி அவன் வாழ்நாளில் மீண்டும் காண முடியாத ஒரு காட்சி போல் தோன்றியது.

''குடிமக்களுக்கு என்னை இந்தக் கோலத்தில் காண்பதில் ஓர் ஆனந்தம் இல்லையா?''

அவர் அதையும் தமக்காகச் செய்து கொள்ளவில்லை என்பது கண்டு உளம் கசிந்துருகினான் விசுவநாதன்.

அரண்மனைக்கு வெளியே இன்னிசைகள் முழங்கத் தொடங்கி விட்டன. சிற்றரசர்களும் அமரநாயகர்களும் அணிவகுத்துக் குதிரைகளில் அமர்ந்திருந்தனர். பட்டத்து யானைகள் மணியோசை எழுப்பிய வண்ணம் சக்கரவர்த்திக்கு முன்னே செல்லக் காத்திருந்தன. சக்கரவர்த்தியின் வெண்புரவி வெண் கொற்றக் குடையோடு அரண்மனை முகப்பில் அவருக்காக நின்றுகொண்டிருந்தது.

அரண்மனைக்குள்ளிருந்து மிடுக்கு நடையோடு வந்த கிருஷ்ண தேவராயர், இளைஞரைப் போல் குதிரை மீது தாவி ஏறினார். அவருடைய அந்தத் துடிப்பைக் கண்ட விசுவநாதனின் நெஞ்சு ஒரு கணம் குலுங்கி விழுந்தது. 'சில நாழிகைகளுக்கு முன்பு எழுந்து நிற்கவும் இயலாமல் என்மீது சாய்ந்து நின்ற அதே மனிதர்தாமா இவர்? எப்படி இவருக்கு அதற்குள் இவ்வளவு வலிமை திரும்பியது?'

நகரத்துக்குள் நுழைந்தது ஊர்வலம்.

விஜயநகரத்தின் தெருக்கள்தோறும் மனிதர்கள்; மேல் மாடங்கள் தோறும் மனிதர்கள்; மரங்கள்தோறும், மலைகள்தோறும் கூட மனிதர்கள்...

சுற்றும் முற்றும் திரும்பிப்பார்த்த கிருஷ்ண தேவராயர் தம்முடைய வெண் கொற்றக் குடையை அகற்றச் சொல்லி விட்டார். வெய்யிலுக்கு நிழல் தந்து கொண்டிருந்தது அந்தக் குடை. குடிமக்களின் விழிகளே அவருக்குக் குளிர் நிழலாகவிருந்தனபோலும். தம்மைக் காணத் துடிக்கும் மக்களை அது தடுக்க வேண்டாமென்று அப்புறப்படுத்தச் செய்து விட்டார்.

நகர் வலம் வந்து முடிந்த பிறகு, நகரத்தின் உட்கோட்டை மதிலைத் தாண்டி நகரத்துக்கு வெளியே படைகளின் அணிவகுப்பை மேற்பார்வையிடச் சென்றிருந்தார் சக்கரவர்த்தி. மதிலைத் தாண்டியவுடனேயே இருபுறமும் வரிசை வரிசையாக நின்றுகொண்டிருந்த வீரர் கூட்டத்தின் ஆரவாரம் விண்ணைதிரச் செய்தது.

முன்னே பட்டத்து யானை செல்ல, அவற்றை அடுத்துக் குதிரைகளின் மீது முரசுகளையும், பலவகை இசைக் கருவிகளையும் முழங்குவோர் செல்ல, அவர்களை அடுத்துச் சக்கரவர்த்தி சென்றார். விசுவநாதன் அவரைத் தொடர்ந்து சென்றான். பின்னே சாளுவ நரசிம்மர், நாகமநாயக்கர் முதலானோரும், மற்ற அமரநாயக்கர்கள், சிற்றரசர் முதலானோரும் சென்றார்கள்.

சேர நாட்டு உதய மார்த்தாண்ட வர்மனுக்கு அங்கு அலைமோதி நின்ற படைக் கடலைக் கண்டவுடனேயே நெஞ்சு நடுங்கியது. வரிசை வரிசையாக முன்னே தரைப் படையினர் நிற்க, அவர்களுக்குப் பின்னே குதிரைப் படையினர் நிற்க, அவர்களுக்கும் பின்னே யானைப் படையினர் நின்றிருந்தார்கள். சம வெளிகளின் மீதும் நீர்நிலைகளைச் சூழ்ந்து கொண்டும், குன்றுகளின் சரிவுகளிலும், அவர்கள் நீக்கமற நிறைந்திருந்தார்கள். கடற்கரையில் நின்று கடலை உற்று நோக்கினால் எவ்வாறு கண்ணுக்கெட்டிய தூரம் வரையில் கடல் தெரியுமோ, அவ்வாறே அந்தப் படைக் கடலும் காட்சியளித்தது.

தரைப்படையில் அம்பெய்யும் வில்லாளர்கள் வாள் வீசுவோர், வேலெறிவோர் இவ்வாறு பல்வேறு பிரிவினர் இருந்தார்கள். அவர்களது கவசங்கள், ஆடை அணிகள், ஆயுதங்கள் இவை யாவுமே கண்ணைப் பறிக்கும் வகையில் ஒளி உமிழ்ந்து கொண்டிருந்தன. வீரத்தின் செருக்கோடு, இரும்பை ஒத்த உடல் வளத்தோடு அவர்களிடம் காணப்பட்ட செல்வத்தின் செருக்கே உதய மார்த்தாண்டனைத் திகைக்க வைத்தது. குதிரைகளையும் யானைகளையும் மட்டிலும் அவர்கள் பொன்னாலும் மணிகளாலும் அலங்கரித்திருக்கவில்லை; அம்புகள், கைக் கோடாரிகள், இரும்புலக்கைகள், உடை வாட்கள், முதலிய! ஆயுதங்கள் கூடப் பொன் முலாம் பூசப் பெற்றுக் கதிரவன் ஒளியில் பளபளத்தன.

மற்றொரு புறம் துப்பாக்கிகள், தீப் பந்தங்கள், பீரங்கிகள், முதலிய ஆயுதங்களில் தேர்ச்சி பெற்ற இஸ்லாமிய வீரர்களின் பெருங் கூட்டம் காணப்பட்டது. வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப் பெற்ற பலப் பல வண்ணப் பட்டுத் துணிகளாலான பளபளக்கும் அங்கிகளோடும், சரிகை ஓடிய தலைப்பாகைகளோடும் அவர்கள் காட்சியளித்தார்கள்.

சக்கரவர்த்தி மெல்லத் தம் வெண் புரவியை நடக்கவிட்டு, வீரர்களை உற்றுப் பார்த்த வண்ணம் அவர்களிடையே சென்று கொண்டிருந்தார். சக்கரவர்த்தி எந்தப் பகுதியில் இருந்தாரோ, அந்தப் பகுதியிலிருந்த வீரர்கள் எழுப்பிய வாழ்த்தொலி அந்தச் சுற்றுப்புறங்களையே கிடுகிடுக்க வைப்பதாக இருந்தது. கேடயங்களை வாள் முனைகளால் தட்டிக் கொண்டே உற்சாக மிகுதியால் அவர்கள் குதித்துக் குரல் எழுப்பினார்கள். குதிரைகள் ஒன்று சேர்ந்து கனைத்தன; யானைகள் தங்கள் துதிக்கைகளைத் தூக்கிச் சக்கரவர்த்தியை வணங்கியவாறே பிளிறின. அம்புகளை வானத்தை நோக்கிச் சொரிந்தார்கள். துப்பாக்கிகள், பீரங்கிகளால் முழங்கினார்கள். தீப்பந்தங்களால் வாண வேடிக்கைகள் காட்டினார்கள்.

உதய மார்த்தாண்டனுக்கு அந்த வீரர்களின் ஆரவாரம் தாங்கக் கூடியதாக இல்லை. தரையே கிடுகிடுத்து விட்டது. மலைப் பாறைகள் உருண்டு விழுவன போல் தோன்றின; செவிகளை அவன் அடைத்துக் கொண்டான்.

'எவ்வளவு ஆனந்தம் இந்த வீரர்களுக்கு! உலகத்துப் படைவீரர்கள் அனைவருமே இங்கு திரண்டு வந்து இவரைத் தலைவராக ஏற்றுக் கொண்டு விட்டார்களோ!' என்று வியப்படைந்தான் உதய மார்த்தாண்டன்.

படைவீரர்கள் அவருக்காக அமைத்திருந்த படை முகாமில் சிறிது நேரம் தங்கியிருந்து விட்டுப் பின்னர் அரண்மனைக்குத் திரும்பினார் சக்கரவர்த்தி. விருந்தினர்களாக

# B·I



# S. S. ரஜூலா

சென்னையிலிருந்து

**1966 ஜூலை 5** — **1966 ஆகஸ்டு 3**

சென்னையிலிருந்து பினாங்கு மற்றும் சிங்கப்பூருக்கு பிரயாணம் செய்ய விரும்பும் பிரயாணிகள் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசதாருக்கு விண்ணப்பிக்கவும்.

மெஸர்ஸ் பின்னி & கோ., லிமிடெட்
7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1

அல்லது கீழ்க்கண்ட கம்பெனியின் அங்கீகாரம் பெற்ற பாஸேஜ் புரோக்கர்களுக்கு விண்ணப்பிக்கவும்

C. M குட்டி
புரொப்ரைட்டர்: குட்டி டிராவல் சர்வீஸ்
38, அங்கப்ப நாயக்கன் தெரு
சென்னை-1

மெஸர்ஸ் கோனா டிராவல்ஸ்
மாஸ்காட் ஹோட்டல்
திருவனந்தபுரம்

நாகப்பட்டினத்திலிருந்து

**1966 ஜூலை 6** — **1966 ஆகஸ்டு 4**

நாகப்பட்டினத்திலிருந்து பினாங்கு மற்றும் சிங்கப்பூருக்குப் பிரயாணம் செய்ய விரும்பும் பிரயாணிகள் தங்களது பிரயாண டிக்கட்டுக்களை கீழ்க்கண்ட விலாசத்தில் நேரிடையாகப் பெற்றுக் கொள்ளலாம்

மெஸர்ஸ் மதுரா கம்பெனி பிரைவேட் லிமிடெட்
முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம்

பினாங்கு, போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலிய இடங்களுக்கு நேரடியாக ஏற்றிச் செல்லவும், சிங்கப்பூரில் கப்பல் மாற்றி ஆஸ்திரேலியா நியூஸிலாந்து துறைமுகங்களுக்கு அனுப்பவும் சரக்குகள் சென்னையிலிருந்தும் நாகப்பட்டினத்திலிருந்தும் ஏற்றுக் கொள்ளப்படும்.

பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றும் விபரங்களுக்குத் தயவுசெய்து எழுதவும்:

பின்னி & கம்பெனி லிமிடெட்
7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1

மதுரா கம்பெனி பிரைவேட் லிட்.
முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம்

ஏஜெண்டுகள்: பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி லிமிடெட்

வந்திருந்த சிற்றரசர்களுக் கெல்லாம் அன்றைக்கு அரண்மனையிலேயே விருந்து ஏற்பாடாகியிருந்தது. உண்டு களைப்பாறிய பிறகு முன்னேற்பாட்டின்படி அனைவரும் சபையில் வந்து கூடினார்கள்.

''விருந்தினர்களான உங்களை வழியனுப்புவதற்கு முன்னால் உங்களிடம் ஒரு முக்கியமான செய்தியைக் கூற விரும்புகிறேன்'' என்றார் சக்கரவர்த்தி.

விருந்தினர்கள் மட்டுமல்ல, அவ்விருந்த அமைச்சர், அச்சுதராயர், ராமராயர், நாகமர், விசுவநாதன் முதலிய யாவருமே சக்கரவர்த்தியின் குரலில் ஒலித்த கலக்கம் கண்டு திகைத்தனர்.

## அத்தியாயம் இருபத்தொன்பது

# சிங்காதனத்திருந்த சிங்கம்

கிருஷ்ணதேவராயர் இந்தப் பரத கண்டத்தின் வரலாற்றையும் அதில் விஜயநகர சாம்ராஜ்யம் தோன்றியதற்கான காரணங்களையும் அவர்களிடம் எடுத்துக் கூறினார்.

''வெறும் மண்ணும் மலைகளும் நதிகளும் நிறைந்த நிலப்பரப்பல்ல இந்தப் பரத கண்டம். மனிதர்கள் உள்ளும் புறமும் உயர்ந்து மனிதப் பிறவியின் முழுப் பயனையும் அடைவதற்கான எல்லா வழிகளையும் இது நமக்குக் கொடுத்திருக்கிறது. வடக்கே ஈசனையும், தெற்கே இருக்குமரனும் தோன்றியுள்ள மண் இந்த மண். ஆனாலும் அந்த நாள் காட்டிய வழிகளை நாம் பயன்படுத்திக் கொண்டு வாழவில்லை. அப்படி நம் முன்னோர்கள் வாழ்ந்திருந்தால் இங்கே படையெடுத்து வந்தவர்களிடம் நம்முடைய செல்வங்களையும், நம்முடைய அற வாழ்வையும், நம் பெண்டிரின் மானத்தையும் பறி கொடுத்திருக்க மாட்டோம்.

''முழுமையான அழிவிலிருந்து பரத கண்டத்தின் தென் பகுதியைக் காக்க வேண்டுமென்பதற்காகவே இந்த சாம்ராஜ்யம் தோற்றுவிக்கப்பட்டது. மாபெரும் அரணாக இது எழுந்து நின்றிருக்கா விட்டால்? நீங்களே சற்று நினைத்துப் பாருங்கள்! அப்படி ஒரு தடுப்பு மதிலாக விஜயநகரம் எழுந்து விட்டதற்காக இது பகைவர்களிடம் என்ன பாடு பட்டிருக்கிறது என்பது உங்களுக்குத் தெரியுமா? ஆண்டுக்கொரு முறை இதன் மேல் படையெடுத்து வருவதும், இதைக் கொள்ளையாடுவதும், இதன் இளைஞர்களைக் கொன்று குவிப்பதும், இதன் பெண்டிரைச் சிறைப் பிடித்துச் செல்வதுமாக இருந்தார்களே, இது உங்களுக்குத் தெரியுமா?

''எனக்குத் தெரியும். நான் இளைஞனாக இருந்த காலத்தில் இந்தக் காட்சிகளை நேரில் கண்டு இரத்தக் கண்ணீர் வடித்திருக்கிறேன். கண்பெற்ற பாவம் என்று கலங்கித் தவித்திருக்கிறேன். எத்தனையோ இரவுகள் உறக்கமின்றிப் புழுவாய்த் துடித்திருக்கிறேன். இங்கே விஜயநகரத்து வீரர்கள் கொன்று குவிக்கப்பட்ட காலங்களில், பெண்டிர் சிறைப் பிடிக்கப்பட்ட காலங்களில், நகரம் சூறையாடப்பட்ட காலங்களில் நீங்கள் தெற்கே பத்திரமாக வாழ்ந்திருக்கிறீர்கள். உங்களுக்காகவும்தான் இது இத்தனை தியாகங்களைச் செய்திருக்கிறது என்பதை நீங்கள் மறந்து விடவேண்டாம்!''

சக்கரவர்த்தியின் குரல் தழுதழுத்தது. அவருடைய விழிகள் அவரது இளமைக் காலத்தில் விஜயநகரம் பட்ட பாட்டினை மீண்டும் கண்டுவிட்டவை போல் பயங்கரமாக விழித்தன. நினைவு திரும்பப் பெற்றவர் போல் அவர் மேலும் பேசலானார்.

''என்னுடைய கடமையை நான் பாதி அளவே நிறைவேற்றி விருக்கிறேன். நான் பிறந்தபோது விஜயநகரம் இருந்ததைவிட, நான் இந்தச் சிம்மாதனத்தில் முதன் முதலாக அமர்ந்தபோது இருந்ததைவிட, இப்போது எவ்வளவோ வலிமை பெற்றிருக்கிறது. பகைவர்களை எண்ணியே அல்லும் பகலும் நடுங்கி வாழும் குடிமக்கள் என்னுடைய ஆட்சியில் ஒருவர் கூட இல்லை. இப்போது பகைவர்கள் நடுங்கும் காலம் வந்து விட்டது.

''ஆனால், நான் நினைத்திருந்ததில் ஒரு பாதியே முடிந்திருக்கிறது. இந்தப் பரத கண்டம் முழுவதும் இப்படி அச்சமற்று வாழும்படியாகச் செய்ய வேண்டுமென்று நான் கண்ட கனவு நிறைவேறவில்லை....., என் காலம்... என் காலம் முடிந்துவிட்டது. எனக்குப் பின்னால் வருபவர்கள் நிறைவேறாத என் கனவை நிறைவேற்றப் போகிறார்களா? அல்லது அவர்களிடம் நான் விடப் போகும் இந்த விஜயநகரத்தையும் பறிகொடுக்கப் போகிறார்களா?''

விசுவநாதன் தனக்குள் குமுறினான். 'சக்கரவர்த்திகளுக்கு இப்போது என்ன நேர்ந்து விட்டது? ஏன் இவ்வாறெல்லாம் கலங்கிப் போயிருக்கிறார்கள்?'

கிருஷ்ணதேவராயர் சபையில் இருந்தவர்களை உற்றுப் பார்த்தார். ஒவ்வொருவரையுமே தனித் தனியாக அவர் உற்று நோக்குவது போல் தோன்றியது.

''இந்தச் சிம்மாதனத்தில் யார் அமர்ந்தாலும் அவர்களால் தனியாக ஏதும் செய்ய முடியாது. இங்கே அமர்ந்திருக்கும் உங்கள் ஒவ்வொருவரிடமும் கேட்கிறேன். நீங்கள் என் கனவை நிறைவேற்றிச் சிறப்போடு வாழப் போகிறீர்களா? அல்லது இருப்பதையும் இழந்து விட்டுப் பூண்டோடு அழியப் போகிறீர்களா?''

சபையினர் அனைவருமே திடுக்கிட்டனர். யாருக்குமே பேசுவதற்கு நா எழவில்லை.

''எனக்குத் தெரியும். தெலுங்கர், தமிழர் கன்னடியர் என்றும், அவரவருக்குள்ளேயும் அந்த நாட்டார், இந்த நாட்டார் என்றும்

பிரித்துப் பேசி, உங்களில் சிலர் பிரிவினைக்கு முழுவதும் எனக்குத் தெரியும். நீங்கள் பிரிவினைகள் செய்து பேரரசர்களாக வாழ முடியும் என்று நினைக்கிறீர்கள். தனிக்காட்டு ஆட்சி செய்து தலைநிமிர்ந்து செருக்குடன் நடமாட முடியும் என்று நம்புகிறீர்கள். விஜயநகரம் நிலைத்து நிற்கும்வரையில்தான் நீங்களும் நிலைத்து நிற்பீர்கள். உங்கள் ஒவ்வொருவரது நலனுக்காகவுமே நீங்கள் ஒற்றுமையுடன் வாழ்ந்து தீர வேண்டிய அவசியம் வந்து விட்டது. குடிமக்களை மறந்து கோலோச்ச நினைக்கிறீர்கள்.

''ஒற்றுமையுடன் வாழ்வதாக நீங்கள் இங்கே சபதம் செய்ய வேண்டும். இன்றிலிருந்து நீங்கள் விரதம் பூண வேண்டும்; குமரி முனையிலிருப்பவனுக்கும் சரி, கலிங்கத்தில் வாழ்பவனுக்கும் சரி, இந்த விஜயநகரம் சொந்தமாகும்! இதுவே உங்களுடைய பாதுகாப்பு அரண்! — சபதம் செய்வீர்களா?''

சரேலென்று தமது உடை வாளை உருவினார் கிருஷ்ணதேவராயர். என்றுமே நடைபெறாத ஒரு சிறு தவறு அப்போது நடந்து விட்டது. உருவிய வாள் அவரது கரத்திலிருந்து நழுவிக் கீழே விழுந்தது.

கிருஷ்ண தேவராயர் தடுமாறினார். அதைக் குனிந்து எடுக்க வேண்டுமென்றுகூட அவருக்குத் தோன்றவில்லை. சபையே வெலவெலத்துப் போய்விட்டது.

விசுவநாதன் ஓடிவந்து வாளை எடுத்து அவர் கரத்தில் நீட்டியபோது அதை வாங்கிக்கொண்டே அவர் அவனுக்குச் சபையின் வாயிலைச் சுட்டிக் காட்டினார். அங்கு பரபரப்போடு நின்று கொண்டிருந்த ஒற்றர் படைத் தலைவனை அவர் எப்படியோ கண்டுவிட்டார்.

''அவனை இங்கு அழைத்து வா!''

விசுவநாதன் சென்ற திசையில் எல்லோரும் திரும்பிப் பார்த்தனர். அமைச்சர் சாளுவ நரசிம்மர் நெருப்பிடையே அகப்பட்டவர்போல் துடித்தார். அவரது விழிகள் உதய மார்த்தாண்டனின் விழிகளைச் சந்தித்த போது அவனும் அவ்வாறே நிலை தடுமாறி இருந்தான்.

''என்ன செய்தி?'' என்று ஒற்றர் படைத் தலைவனிடம் கேட்டார் சக்கரவர்த்தி.

''பாண்டிய நாட்டின் மேற்குப் பகுதி விதுரம், மதுரையைச் சூழ்ந்தும் அங்கங்கே பயங்கரமான கலவரங்கள் நடந்து வருகின்றன. கலவரத்தைத் தூண்டி விடுகிறவர்கள் தமிழர்களுக்குத் தெலுங்கர்கள் பகைவர்கள் என்ற வெறுப்பைத் தீவிரமாகப் பரப்பி வருகிறார்கள். மதுரையிலிருக்கும் நம் படைகளை நாலாபுறமும் சிதறச் செய்து குழப்பம் விளைவித்து வருகிறார்கள். உடனடியாக அமைதியை நிலைநாட்டா விட்டால் கலவரம் எங்குமே பரவி விடும்போல் தோன்றுகிறது.''

கிருஷ்ண தேவராயர் பசி கொண்ட வெம்புலியாக மாறினார்; கோபத்தால் அவர் தேகம் முழுவதுமே பதறியது. கண்கள் நெருப்பை உமிழ்ந்தன.

''விசுவநாதா!'' என்று கர்ஜித்தார். ''நம்முடைய வீரர்களில் ஒரு லட்சம் பேரை அழைத்துக்கொள். கலவரத்துக்குக் காரணமாக இருப்பவர்களிடம் சிறிதுகூடக் கருணை காட்டாதே! அவர்களுக்குக் காலனாகவும், தமிழ்நாட்டுக் குடிமக்களுக்குக் காவலனாகவும் நீ விளங்க வேண்டும். மதுரையில் மற்றொரு விஜயநகரம் உன்னால் தோற்றுவிக்கப்பட வேண்டும்! என்னுடைய சொந்தப் பொக்கிஷத்தில் உள்ள பொருள்களை யெல்லாம் கொண்டு செல். அந்தக் குடிமக்களின் நல்வாழ்வுக்காகவே அவ்வளவையும் செலவிடு. குடிநீர்க் குளங்கள், ஏரிகள் வெட்டு; கோவில்களைப் புதுப்பித்துக் கட்டு; பாடசாலைகளை ஏற்படுத்து. அவர்களையும் வாழ வைப்பதற்காகவே விஜயநகரம் தோன்றியிருக்கிறது என்பதை உன் செயலால் மெய்ப்பித்துக் காட்டு!''

விசுவநாதனை அருகில் அழைத்தார். மெல்ல அவனை அணைத்துக் கொண்டே, ''எங்கே, உன் கையால் ஒரு தாம்பூலம் மடித்துக் கொடு!'' என்றார்.

விசுவநாதனால் கண்ணீரை அடக்க முடியவில்லை. சக்கரவர்த்திகளின் போக்கே புரியவில்லை மற்றவர்களுக்கு. விசுவநாதன் தாம்பூலத்தை மடித்து அவரிடம் நடுங்கும் கரங்களால் நீட்டினான்.

தாம்பூலச் சிவப்பு உதட்டில் படிந்தவாறே சிம்மாதனத்தில் சாய்ந்தார் கிருஷ்ணதேவராயர். விழிகளில் கருணை ஒளி, இடது கரம் உடைவாளைப் பற்றியபடியே இருந்தது.

அனைவருமே நடுங்கினர். ஒற்றர் தலைவனிடம் என்றுமே அவர் தனித்துப் பேசுவது தான் வழக்கம். அவன் ஒற்றர் தலைவன் என்பதையே பலர் அறிந்ததில்லை. அவனும் அவருக்குக் குறிப்பால் உணர்த்தவே தொலைவில் நின்று கொண்டிருந்தானே தவிர, பேசுவதற்கு வரவில்லை. 'சக்கரவர்த்திகளுக்கு நினைவு தடுமாறி விட்டதோ...?'

''சொல்! என்ன செய்தி? எந்தச் செய்தியாக இருந்தாலும் அது இங்குள்ள அனைவரும் தெரிந்து கொள்ள வேண்டிய செய்திதான்!''

சிற்றரசர்கள் முன்பாகச் சிம்மாதனத்தில் வீற்றிருந்தார் அவர். விசுவநாதனுக்கே ஒரு கணம் கழிந்த பிறகுதான் உண்மை விளங்கியது.

''சக்கரவர்த்திகளே!'' என்று அவர் காலடியில் கதறினான் அவன். இந்த நாட்டு இலட்சியத்தின் விடிவெள்ளிச்சுடர்களென அவர் விழிகள் மின்னிக் கொண்டுதானிருந்தன.

சிம்மாதனத்திருந்தவாறே அந்தச் சிங்கம் அமரர் உலகை ஆளச் சென்றுவிட்டது.



## இரண்டாம் பாகம் முற்றிற்று






# தரத் தேயிலைத் தூள்களிலே தனிப்பெருமை வாய்ந்தது

# லிப்டன்ஸ்

## ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் டீ

குணமும், சுவையும் நிறைந்த பொன்னிறமுள்ள டீ யை வெகு சீக்கிரத்தில் இந்தத் தேயிலையைக் கொண்டு அதிகமான கப்புகளைப் பெறுவீர்கள். இந்த ஒப்புயர்வற்ற டீ யை நீங்களே பருகிப் பாருங்கள்—உங்கள் விருந்தினர்களுக்கும் கொடுங்கள். நிச்சயமாக இதை ரசித்து நீங்கள் மகிழ்வீர்கள்—ஆம்!—அப்படியே உங்கள் விருந்தினர்களும்கூட! தரத் தேயிலைத் தூள்களில் லிப்டன்ஸ் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் டீ தனிப்பெருமை வாய்ந்தது. தன்னிகரற்றது என்பது உண்மை.




லிப்டன் என்றாலே நல்ல டீ

பூஜையை முடித்துத் தியானத்தில் ஆழ்ந்தான் பாலசுந்தரம். அவன் உள்ளம் அதில் லயிக்கவில்லை. எங்கெங்கோ ஓடி அவனை அலைக்கழித்தது.

'மூடியிருந்த கண்ணைத் திறந்து தேவியின் திருமுகத்தை நோக்கினான். தேவி தன்னைப் பரிகசித்து முறுவலிப்பது போல் ஒரு தோற்றம். 'உன் திருவுள்ளம் இதுவானால் நான் என்ன செய்ய முடியும்?' என்றவாறு எழுந்தான். நெடுஞ்சாண்கிடையாக விழுந்து பணிந்தான். பூஜை அலமாரியை மூடிவிட்டு அடுத்த அறைக்குச் சென்றான். ரத்தினக் கம்பளத்தை விரித்துப் பெரிய காகித உறையுடன் அமர்ந்தான்.



# இலட்சியக் காதல்

•எஸ்லார்வி•

அந்தப் பெரிய காகித உறையினுள் சிறிய காகித உறைகளும் அச்சிட்ட அழைப்பிதழ்களும் முகவரிகள் அடங்கிய பட்டியல் ஒன்றும் இருந்தன. இன்னும் எழுதியாக வேண்டிய முகவரிகளையெல்லாம் அவன் எழுதத் தொடங்கினான்.

திருமணம் அவனுக்குத்தான். அவனே தான் அனைத்தும் செய்து கொள்ள வேண்டியிருந்தது. திருமணப் பேச்சுத் தொடங்கிய நாள் முதல், பூஜை, தியானம் இவை மட்டும் என்ன? எதிலுமே அவன் உள்ளம் நிலைத்திருக்கவில்லை. ஏறக்குறைய ஒரு மாதமாக இதே நிலைதான்.

அன்று...

வழக்கம்போல் பாடத்தை முடித்துக் கொண்டு பாலசுந்தரம் கிளம்பினான். முரளி அவனிடம் வந்தான்.

''உங்கள் ஜாதகம் வேண்டும் ஸார்!''

பாலசுந்தரம் திடுக்கிட்டான். ''எதற்கு?'' என்றான்.

முரளி சிரித்தான். ''மணமாகாத ஒருவரின் ஜாதகத்தைக் கேட்டால், 'எதற்கு' என்று திருப்பிக் கேட்பவர் இந்நாளில் உண்டோ? ஜாதகம் கேட்டால் மறுக்கக் கூடாது என்பார்கள். எப்பொழுது உங்கள் அறைக்கு வர?''

''நீங்கள் வந்து அலைவானேன்? நானே மறுநாள் பாடத்துக்கு வருகிறபோது நானே கொண்டு வந்து தருகிறேன்.''

''அது முறையன்று. நீங்கள் இருக்கும் இடம் தேடி வந்து, பெண் ஜாதகத்தை உங்களிடம் கொடுத்து, உங்கள் ஜாதகத்தைப் பெற்று வர வேண்டும்.''

''அட!...என் வயதை ஒத்த, பிரம்மச்சாரியான உங்களுக்கு இதெல்லாம் எப்படி...யார் சொல்லிக் கொடுத்தார்கள்?''

''அப்பா.''

பாலசுந்தரத்தின் கண்கள் வியப்பால் மலர்ந்தன. வேதாசலம் ஊரில் இல்லை என்பது அவனுக்கும் தெரியும்.

''அப்பாவா!... உம்... சரி; இன்னொரு பாடத்துக்குப் போக வேண்டும். அறைக்கு நான் திரும்ப இரவு ஒன்பது மணி ஆகும்.''

''நான் ஒன்பதே காலுக்கு வருகிறேன்'' என்றான் முரளி.

விடைபெற்றுப் பிரிந்த பாலசுந்தரத்தின் உள்ளம் அப்போது முதலே அலைபாயத் தொடங்கி விட்டது.

'முரளி தன் பொறுப்பில் ஜாதகம் கேட்கிறான் என்றால் ஏழைமை நிலையில் உள்ள நண்பன் ஒருவனின் தங்கைக்காக என்று கொள்ளலாம். முரளியோ, தகப்பனாரின் பெயரை இதில் இணைக்கிறான். அவர் வாங்கும்படி சொல்லி யிருப்பாரோ!... எளிய நிலையில் உள்ள அவருடைய நண்பர் ஒருவரின் பெண்ணுக்காக இருக்குமோ!...'

இப்படியெல்லாம் அவன் மனம் எண்ணிற்றே தவிர, முரளியின் குடும்பத்தோடு தன்னை இணைத்து எண்ணிப் பார்க்கவே இல்லை. ஆம். அப்படியெல்லாம் அசட்டுப் பிசட்டென்று பகற் கனவிலே மூழ்கும் பாமர

மனோபாவம் உடையவன் அல்லன் அவன். அவர்கள் நிலை எங்கே, அவன் தகுதி எங்கே? இரண்டு ஆண்டுகளுக்கு முன் அவர்களிடையே ஏற்பட்ட தொடர்பு... அதை அவன் ஒரு நாளும் மறந்தவன் இல்லையே!

கையில் உள்ள குறிப்பையும், பங்களாவின் அமைப்பையும் ஒப்பிட்டுப் பார்த்த பாலசுந்தரம் கேட்டைத் திறந்து கொண்டு உள்ளே சென்றான். முன்புற அறையில் ஜன்னல் கட்டையில் அமர்ந்து, கையிலிருந்த புத்தகத்தில் கண்ணைப் பதித்திருந்த தங்கப் பதுமை தலை நிமிர்ந்தது. எழுந்து நின்ற அந்தக் கயல்விழிகள் மலர்ந்து ஒளி வீசுவதைப் பாலசுந்தரம் கண்டான். அசைவற்று அப்படியே நின்றான். ஒரு கணம் நான்கு கண்களும் கலந்தன.

'யாராவது பார்த்தால்?...'–இந்த நினைவு அவனிடம் சலனத்தை உண்டுபண்ணிற்று. ''யார் இருக்கிறாரா?'' என்று மெதுவாகக் கேட்டான்.

''இதோ வந்து விடுவார். ஹாலில் வந்து உட்காருங்கள்.''

பாலசுந்தரத்துக்குக் கூச்சமாக இருந்தது. ''பரவாயில்லை, போய்விட்டு அப்புறம் வருகிறேன்'' என்று மென்று விழுங்கினான். அவள் கலகலவென்று சிரித்தாள்.

''அப்பாவும் அம்மாவும் ஓரிடத்துக்குக் கல்யாணம் விசாரிக்கப் போனார்கள். நீங்கள் வந்தால் இருக்கச் சொல்லும்படி அப்பா சொல்லிவிட்டுப் போனார். போய் அரை மணி ஆகிறது. வருகிற நேரம்தான். இருப்பதும் போய் வருவதும் உங்கள் விருப்பம்.''

இப்படிக் கூறிவிட்டு அவள் அறைக்குள் சென்றாள். பாலசுந்தரம் ஹாலை அடைந்து சோபாவில் அமர்ந்தான். அழகும் அறிவும் நிரம்பிய பருவ மங்கை ஒருத்தியை நேருக்கு நேராக நிமிர்ந்து பார்த்துப் பேசிய புதிய அநுபவத்தின் அதிர்ச்சி அவனை ஆட்டிப் படைத்துக் கொண்டிருந்தது.

அன்று காலையில் அவனுக்கு ஒரு கடிதம் வந்தது. இந்தப் பங்களாவின் உரிமையாளர் வேதாசலம் அவனை அழைத்திருந்தார். கடிதத்தில் விவரம் எதுவும் இல்லை. குறித்த நேரத்தில் அவன் வந்தான்.

மிடுக்காகக் கேட்டைத் திறந்துகொண்டு துடுக்காக ஓடி வந்த சிறுமி ஹாலை அடைந்ததும் அவனை ஒரு முறை ஏறிட்டுப் பார்த்துவிட்டு உள்ளே சென்றாள். அறையில் மென்மையான பேச்சொலி எழவே, பாலசுந்தரம் திரும்பிப் பார்த்தான். அழகிய விழிகள் நான்கு அங்கிருந்து அவனை நோக்கின.

பங்களா வாசலில் கார் வந்து நின்றது. வேதாசலமும் அவர் மனைவி லட்சுமி அம்மாளும் அதிலிருந்து இறங்கி உள்ளே வந்தார்கள். சௌந்தரியம், பெருந்தன்மை முதலிய சிறப்புகள் அவர்களிடம் சுடர் வீசின. அவர்களைக் கண்டதும் பாலசுந்தரம் மரியாதைக்கு எழுந்து நின்றான்.

''மன்னிக்கவேண்டும். பத்து நிமிஷங்கள் தாமதமாகி விட்டது.''

''பெரியவர்கள் அத்தனை பெரிய வார்த்தை...''

''வாருங்கள், மேலே போகலாம்'' என்று வேதாசலம் மாடிப் படிக்கட்டில் ஏறினார். பாலசுந்தரம் அவரைப் பின்தொடர்ந்தான். அவர்கள் மேலே சென்று அமர்ந்ததும் இரு பெண்களும் சிற்றுண்டி, காப்பி கொண்டு போய்வைத்தார்கள். அசைவிலே திரும்பிய பாலசுந்தரத்தின் பார்வையில் பெண்களில் பெரியவளின் பார்வை கலந்தது. அவள் இதழ்களில் குறுநகை நெளிவதை அவன் கண்டான்.

''எனக்கு ஒரே பிள்ளையும் மூன்று பெண்களும். மூத்த பெண் பங்கஜா பம்பாயில் வாழ்கிறாள். இரண்டாமவள் பத்மஜா கல்லூரி மாணவி. கடைக்குட்டி ஜலஜா உயர்நிலைப் பள்ளியில் படித்து வருகிறாள்'' என்று அறிமுகம் செய்வித்தார் வேதாசலம். பெண்கள் பாலசுந்தரத்துக்கு வணக்கம் தெரிவித்துவிட்டுப் பதவிசாக இறங்கிக் கீழே சென்றார்கள். காப்பி அருந்தியானதும் வேதாசலம் பேச்சைத் தொடர்ந்தார்.

''எங்கள் குடும்பத்தில் எல்லோருக்குமே இசையில் ஆர்வம் உண்டு; பக்தி உண்டு. ஒரு சிறிது ஞானமும் உண்டு. பெரிய பெண் வீணை வாசிப்பாள். இரண்டாவது பெண்ணுக்குக் குரல் வளம் இல்லை. அவளுக்கு வாத்தியப் பயிற்சி அளிக்க முயன்றேன். குடும்ப டாக்டர் உதவாது என்றார். மூன்றாவது பெண்ணுக்கு அடிப்படைப் பயிற்சிகள் முடிந்திருக்கின்றன. பயிற்சி அளித்தவர் இசைக் கல்லூரி ஒன்றில் உத்தியோகம் ஏற்று வெளியூர் சென்றுவிட்டார். அவளுடைய பயிற்சி தொடர வேண்டும்.

''குடும்பத்தோடு ஆலயம் தொழுவது எங்கள் பழக்கங்களில் ஒன்று. 'பெரிய கோவிலில் முந்தைய நாள் மூன்றும் முறையாக உங்கள் கச்சேரியைக் கேட்டோம். அப்போது என் உள்ளத்தில் ஓர் எண்ணம் எழுந்தது. அதே நேரத்தில் என் இரண்டாவது பெண் பத்மஜா சொன்னாள்: 'இவர் எவ்வளவு விதரணையாகப் பாடுகிறார் அப்பா! நம் ஜலஜாவுக்கு இவரைப் போல் ஒரு வாத்தியார் கிடைத்தால்!..... அவளுடைய குரலுக்கும் ஞானத்துக்கும் மிக விரைவிலேயே முன்னேறி, கச்சேரி செய்யும் தகுதியைப் பெற்றுவிடுவாள் அப்பா!' என்று.

''எனக்கு வியப்பாக இருந்தது. 'நாம் நினைத்ததைக் குழந்தை சொல்கிறாளே!' என்று. ஜலஜாவைக் கேட்டவுடன் மகிழ்ச்சியோடு தலையசைத்தாள். பையன் முரளி, 'வெரி குட் ஐடியா அப்பா!' என்றான். 'பாட்டில் மட்டுமின்றி, குணத்திலும் இவர் சிறந்தவராம்' என்று கூறினான். உங்கள் முகவரியை அறிந்து கடிதம் எழுதினேன். இப்போது உங்கள் கருத்தை அறிய விரும்புகிறேன்'' என்று கூறி நிறுத்தினார்.

பாலசுந்தரத்துக்கு மூச்சுத் திணறியது. ''நீங்கள் என் தந்தைக்கு ஒப்பானவர். உங்கள் சொற்படி நடப்பது என் கடமை'' என்று அவன் தன் பேச்சை முடித்தான்.

நல்ல நாளில் ஜலஜாவின் இசைப் பயிற்சி தொடரலாயிற்று. அந்த வீட்டினர் பாலசுந்தரத்தைப் பாட்டு வாத்தியார் என்று

எல்லையில்லாப் பெரு வெளியில் விரிந்து பரந்து நிறைந்துள்ள உன்னை நான் இந்த மனத்தில் எப்படி உள் ளடக்கிக் கொள்ள முடியும்?

ஆனால் நீயோ ஒரு மலரிலே உன் பெருமை முழுவதும் விளங்க வீற் றிருக்கும் தோற்றம் விந்தையான தாகவே உள்ளது.

மலர்களை நிரப்பி முழுமையாக்கி விடும் நீ இந்த மனத்தை மட்டும் ஏன் நிரப்ப முடியவில்லை? என்பது விந்தையாகவே உள்ளது.

நிறைவில்லாததில் வீற்றிருக்க விரும்பாததே உன் பெருமை. என்



மனத்தையும் நிறைந்துவிட வேண் டும் என்ற எண்ணத்தோடுதான் நீ வருகின்றாய். ஆனால் ஆழம் காண முடியாத இந்த மனத்தின் பேராசை யைக் கண்டு சிறு மலரை நாடிச் சென்று நீ பெருமையோடு வீற்றிருக் கின்றாய்.

என்னுடைய இந்தப் பேராசை பிடித்த மனத்தை ஒரு மலர் அரும் பைப் போல் சுருக்கி உன் திருக் கோயி லாக்கி வைக்க நான் என்றுதான் கற்றுக் கொள்ளப் போகிறேனோ?

— க. ரத்தினம்

---

கருதவில்லை. அவனும் அப்படிப் பழகவில்லை. வற்புறுத்தலின்பேரில் பல முறை அவன் அவர்கள் இல்லத்தில் உணவு கொண்டிருக்கிறான்; தன்னைப் பற்றிய செய்திகள் முழுவதையும் சிறுகச் சிறுகச் சொல்லி விருக்கிறான்.

மாலையில் பள்ளியிலிருந்து வந்த ஜலஜா எங்கே என்ன செய்து கொண்டிருப்பாளோ; ஐந்தே முக்காலுக்குக் கைகால் கழுவிக் கொண்டு முன் ஹாலுக்கு வந்து விரிப்பில் தம்பூராவுடன் தயாராகக் காத்திருப்பாள். பாலசுந்தரம் ஹாலில் காலடி வைப்பதைப் பார்த்து யாரும் கடிகாரத்தை ஆறு மணி என்று சீர்செய்து கொள்ளலாம்.

உடனே சுருதி ஒலிக்கும்; பாடம் தொடக்கமாகும். பாலசுந்தரம் கண்ணை மூடி இசையிலே லயித்தாலுமல் பாடம் முடிந்து எழுந்து போகிறபோதுதான் கண்ணைத் திறப்பான். ஏதாவது ஓர் அம்சம் நெருடாக இருந்து. ஜலஜாவுக்கு அது வரவில்லையானால் அவன் இலேசில் விடமாட்டான்.

பாடம் தொடங்கியதும் பத்மஜா அடுத்த அறைக்கு வந்து விடுவாள். கண்ணை மூடி, கருத்தை ஒன்றி இசையில் லயிப்பாள். பாலசுந்தரம் கம்பீரமாக அமர்ந்து பாடம் சொல்லும் முறையும், ஜலஜா பயபக்தியோடு பயிலும் அழகையும் பலகணி வழியே பார்த்து மகிழ்வாள். அப்போது அவள் உள்ளத்தில் உணர்ச்சிகள் அலை மோதும். எனினும் எதிலும் நிதானம் தவற மாட்டாள். அடிக்கடி பாலசுந்தரத்தின் எதிரே வந்து பல்லைக் காட்ட மாட்டாள். எப்போதாவது ஏதாவது கீர்த்தனங்கள் எழுதி வாங்கிக் கொள்வாள். யாவும் தங்கை மூலம்தான். இப்படிக் கௌரவமான முறையில் முழுசாக இரண்டு ஆண்டுகள் ஓடி மறைந்தன. இந்த நிலையில் அவன் எதைக் கொண்டு பகற் கனவு காண முடியும்?

"மிஸ்டர் பாலசுந்தரம்!..."

பாலசுந்தரம் கடிகாரத்தைப் பார்த்தான். 9–15. முரளி தந்த ஜாதகத்தை வாங்கி அம்மன் சந்நிதியில் வைத்து விட்டுத் தன் ஜாதகத்தை எடுத்துக் கொடுத்தான். இருவரும் அமர்ந்தனர். பிறகுதான் பாலசுந்தரம் முரளி தந்த ஜாதகத்தைப் பிரித்துப் பார்த்தான். உடனே மின் தாக்குதல் பெற்றவன் போல் ஆனான். 'வேதாசலத்தின் இரண்டாம் புதல்வி சௌ. பத்மஜாவின் ஜாதகம்' என்ற வரிகள்தாம் அவனை அப்படி மருள வைத்தன. முரளி சிரித்தான்.

"பாலசுந்தரம், எங்கள் அப்பா ஒரு சமதர்மவாதி..."

"இருக்கலாம்; ஆனால்....அதற்காக ஒரு பெண்ணை..."

" 'கட்டுப்படுத்தலாமா?' என்கிறீர்களா? இந்தக் கேஸ் அப்படி இல்லை; பெண்தான் அப்பாவைக் கட்டுப்படுத்தினாள்; அண்ணன் வாய்க்கும் பூட்டிட்டு விட்டாள்!"

"அப்படியா!..." பாலசுந்தரம் மகிழ்ச்சியால் திணறினான்.

"ஆம். அம்மாவின் தூண்டுதலால் அப்பா பத்மஜாவுக்கு வரன் தேடத் தொடங்கினார். பத்மஜா என்னை அணுகி ஆதரவு நாடினாள். நான் மறுத்தேன். அவள் வாதாடினாள். மூன்று நாட்கள் தொடர்ந்து போராட்டம் நடந்தது.

" 'பித்தன், பேயன் என்ற பெயருடன் யாரும் விரும்பாத இடத்தில் வாழும் சிவனை விரும்பிய சிவையைப் போல் நீ ஆசைப்படுகிறாயே! பாலசுந்தரம் ஏழை; பரம ஏழை. ஆங்கிலப் படிப்போ உத்தியோகமோ இல்லை. சங்கீதத் துறையில் கச்சேரி, புகழ், வருவாய் என்றெல்லாம் இல்லை...' என்று நான் கூறி முடிக்குமுன் அவள் கலீரெனச் சிரித்தாள்.

" 'எதிர்க் கட்சிக்கு வாதாடுகிறாயே, அண்ணா! பாலசுந்தரத்தை நீ சிவனோடு ஒப்பிட்டது எவ்வளவு உயர்வு! அதைக் கேட்க என் உள்ளம் எத்தகைய மகிழ்ச்சியை அடைகிறது தெரியுமா?... ஏழையாவது பணக்காரராவது! யாரும் எதையும் கொண்டு வருவதும் இல்லை; கொண்டு போவதும் இல்லை; படிப்பும், உத்தியோகமும் பொருள் ஈட்டும் சாதனங்கள் தாமே! சங்கீதமும் ஒரு படிப்பே அல்லவா? கச்சேரி, வருவாய், புகழ்! — தகுதி இருக்கிறது. அதிர்ஷ்டம் கூடவில்லை. நாற்பது வயதுக்கு மேல் பிரகாசித்தவர்கள் இல்லையா? இவரும் ஒருநாள் புகழ் வானில் திகழலாம். இல்லாவிட்டால் பரவாயில்லை. ஆகா!... அவர் எப்படித்தான் பாடுகிறார்! அவர் இசையிலே நான் தெய்விகத்தைக் காண்கிறேன் அண்ணா. எப்படியும் சொத்திலே ஒரு பங்கு எனக்கு

அனிப்பீர்களே. ஆசிரக் கைக்கிலே வாரி இறைத்துத் திருமணம் நிகழ்த்த வேண்டாம். ஸ்ரீதனமாகக் கிடைப்பதைக் கொண்டு நாங்கள் அமைதியாக வாழ்கிறோமே! அப்பாவுக்கு இந்தக் கொள்கை பிடிக்கும். சரி என்பார். நீ குறுக்கே புகுந்து குளறினால் தான் உண்டு. எனவே, உன்னைச் சரிக்கட்டுவது முக்கியம் என்று முதலில் உன்னிடம் பேசுகிறேன்" என்றான். அவனுடைய உறுதி என் உள்ளத்தைத் தொட்டது என்றாலும், மேலும் அவன் வாயைக் கிளறினேன்.

"ஒருவேளை முன்பே அவருக்கு மணமாகியிருந்தால்?"

"இல்லையென்று அப்பாவிடம் ஒரு நாள் சொன்னார்."

"ஜாதகங்கள் பொருந்தா விட்டால்?"

"கட்டாயம் பொருந்தும்."

"பாலசுந்தரம் உன்னை ஏற்க வேண்டுமே?"

"என் நினைவு புனிதமானது. இதன் பிரதிபலிப்பு அங்கேயும் இருந்தே தீரவேண்டும்."

"அவள் இவ்வாறு கூறியதும், தகப்பனாரை அணுகி, அனைத்தும் சொன்னேன். அவர், 'வெரி குட் பிரபோஸல்!' என்றார். தாயார் என்றுமே நல்லவள். எங்கள் ஒருமித்த தீர்மானத்தை மறுக்கவில்லை. எனவே, அப்பா நேற்று ஊருக்குப் புறப்படுகையில் உங்கள் ஜாதகத்தை வாங்கச் சொன்னார்; வாங்கிவிட்டேன்: பத்மஜா சொன்னபடி இவை பொருந்தவும் பொருந்தும். விரைவில் கொட்டு மேளம்தான்!" என்று சிரித்தான் முரளி. பாலசுந்தரம் உடம்பைச் சிலிர்த்துக் கொண்டான்.

முரளி விடைபெற்றுச் சென்றதும் பாலசுந்தரம் அம்மனை வணங்கி எழுந்தான். அவன் கண்களில் ஆனந்த பாஷ்பம் பெருகிற்று. அவன் நிலைக்கு இவை யாவும் கனவுக்கும் அப்பாற்பட்டவை அல்லவா?

செயல்கள் மளமளவென்று முன்னேறின. இரு தரப்புக்களிலும் அழைப்பிதழ்கள் அச்சாகிவிட்டன. இன்னும் எட்டே நாட்களில் திருமணம். அழைப்பிதழ்களை அனைவருக்கும் அனுப்பிவிட்டு, ஊருக்குச் சென்று பாலசுந்தரம் தன் பெற்றோர்களை அழைத்து வர வேண்டியதுதான் பாக்கி. அவர்கள் வந்ததும் தங்க, பத்மஜாவோடு குடும்பம் நடத்த, சின்னஞ் சிறு வீடு ஒன்றையும் அவன் திட்டம் செய்துவிட்டான். இந்நிலையில் அவன் உள்ளம் அலையாமல் என்ன செய்யும்?

தடதடவென்ற காலடி ஓசையின் இறுதியில் படபடவென்று கதவைத் தட்டும் ஒலி பிறந்து அதிர்ந்தது. பாலசுந்தரம் கதவைத் திறந்தான். முரளி தலைவிரிகோலமாக உள்ளே வந்தான். பொத்தென்று தரையில் அமர்ந்து சுவரில் சாய்ந்தான். "என்ன முரளி என்ன?... என்ன?" என்று பாலசுந்தரம் பதறினான்.

"எங்கள் மாமா வீட்டில் நிகழ்ந்த சிறு வைபவம் ஒன்றுக்கு எங்கள் அம்மாவும் ஜலஜாவும் போயிருந்தார்கள் அல்லவா? அவர்களும் மாமா வீட்டினரும் சேர்ந்து இன்றிரவு திருச்சியிலிருந்து கிளம்பி நாளைக் காலை இங்கு வருவதாகத் திட்டம். ஆனால் ஒரு மணி நேரத்துக்கு முன் அம்மா மாரடைப்பால் காலமானதாக..."

"ஹா!..."

"நாங்கள் காரில் திருச்சி போகிறோம். இத்தகைய நெருக்கடியில் நான் ஏன் இங்கே வந்தேன் என்றால், நாங்கள் இன்னும் யாருக்கும் அழைப்பிதழ் அனுப்பவில்லை. நீங்கள் என்ன செய்திருக்கிறீர்களோ தெரியாது.. இனிமேலும் யாருக்கும் அனுப்ப வேண்டாம் என்று சொல்லத்தான் வந்தேன்."

"இது நடக்கிறது, முரளி; எதிர்பாராத இந்த இடி...."

"ஏற்பாடுகள் இப்படியே நிற்கட்டும்; பிறகு..."

"அதையெல்லாம் பற்றி இப்போது என்ன?"

"அப்பா சொல்லச் சொன்னார்!"

"ஹூம்!..... இதன் பிறகுமா என் தொடர்பை விரும்..."

"இப்படி நீங்கள் ஏதாவது யோசிப்பீர்கள் என்றுதான் அப்பா என்னை அனுப்பி இதைச் சொல்லச் சொன்னார். எங்களை விலக்கு நீங்களா பொறுப்பாளி?"

"இப்படி யாரும் எண்ணவே மாட்டார்கள் முரளி. 'துடைகாலி' என்றுதான் என்னைச் சொல்வார்கள். இத்தகைய தங்கமான மனிதர்களின் தொடர்பைப் பல பிறவிகளில் தவம் இயற்றிப் பெற வேண்டும். எனக்கு வாய்ப்பு இருந்தால் கிட்டட்டும். இந்தச் சூடு ஆறுகிற வரைக்கும் மட்டும் அல்ல; இதற்காக ஆயுட்காலம் முழுவதும் நான் காத்திருப்பேன் முரளி."

முரளி விடைபெற்றுச் சென்றான்.

எதிரே ஆள் இருந்து பேசியவரையில் பாலசுந்தரத்துக்கு ஒன்றும் தோன்றவில்லை. முரளி சென்றபின் பாலசுந்தரம் வெலவெலத்துப் போய்ப் படுக்கையில் விழுந்தான். விரிப்பிலே பரவிக் கிடந்த அழைப்பிதழ்கள் அவனைப் பார்த்துச் சிரித்தன.

அன்று மாலையே அவனைத் தேடி இன்னொரு செய்தி வந்தது. ஊரில் அவன் தகப்பனார் கவலைக்கிடமான நிலையில் இருப்பதாக அந்தச் செய்தி கூறிற்று. உடனே அவன் புறப்பட்டான்.

இதன் பின்னர் எல்லாம் எப்படி எப்படியோ நடந்தேறின. அவனுடைய தந்தை தேறி எழவில்லை. படுக்கையில் கிடந்த அவரை அவன் பிரியவும் முடியவில்லை; சென்னைக்கு அழைத்து வரும் நிலையிலும் அவர் இல்லை. இப்படிச் சிலகாலம் அல்ல; பல மாதங்கள்.

பாலசுந்தரம் வேதாசலத்துக்கு ஒரு கடிதம் எழுதினான். அவருக்கும் முரளிக்கும், பெண்களுக்கும் ஆறுதல் கூறித் தன் நிலைமையையும் அதில் விளக்கியிருந்தான். முகவரிக்கு உரியவர் இல்லை என்று கடிதம் அவனுக்கே திரும்பி வந்து விட்டது. அவன் வேதனை அடைந்தான்.

பெரியவர் பிழைத்தெழுந்து தெம்பும் திடமுமாய் நடமாடலானார். இனிமேல் கவலை இல்லை என்ற நிலை ஏற்பட்டதும் பால










நியாகராஜன் - லக்ஷ்மிகாந்தம்

விஜயபுரம் கே.டி.ஆர். வாசனுதி திரவியசாலை நிர்வாகி, கவிஞர் மா. வரதராஜனின் இளவல் தியாகராஜனுக்கும் செல்வி. லக்ஷ்மிகாந்தத்துக்கும் தில்லை விளாகத்தில் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. தலைவர் காமராஜர் மற்றும் மத்திய, மாநில அமைச்சர்கள், வியாபாரப் பெருமக்கள் வாழ்த்துக்கள் அனுப்பியிருந்தார்கள்.

**சுந்தரம் பரபரப்புடன் சென்னைக்கு வந்தான். அங்கே அவனுக்குக் கிடைத்த செய்திகள்!**

அவனுடைய முதல் கடிதப்படி தோட்டம் முதலாளி அவன் அறையைக் காலி செய்து வேறு ஒருவருக்கு விட்டிருந்தார். புதுக் குடித்தனத்துக்கென்று திட்டம் செய்திருந்த சிறு வீடும் அப்படியே பிறர் வசம் ஆகியிருந்தது. அவன் சொல்லி வந்த பாடல்களும் கைமாறியிருந்தன. இவையெல்லாம் கூட ஒரு பொருட்டாக இல்லை அவனுக்கு : வேதாசலத்தின் பங்களாவில் வேற்று மனிதர் வசித்ததுதான் பெரும் ஏமாற்றமாக இருந்தது. தமிழ் தெரியாத அவர்களிடமிருந்து ஆங்கிலம் அறியாத இவன் விவரம் எதுவும் அறிந்து கொள்ள முடியவில்லை. நயமற்ற அவர்கள் பேச்சிலிருந்து அந்தப் பங்களாவை வேதாசலத்தினிடமிருந்து அவர்கள் வக்கீல் ஒருவர் மூலம் வாங்கியிருக்கிறார்கள் என்பதை மட்டுமே தெரிந்து கொள்ள முடிந்தது.

கடல் போன்ற நகரத்திலே அவன் வேதாசலத்தையும் அவர் குடும்பத்தினரையும் எங்கே என்று தேடுவான்? அவனுக்குச் சென்னை கசந்தது; சங்கீதம் கசந்தது : வாழ்க்கை கசந்தது; எல்லாமே கசந்தது.

'ஊருக்குப் போவோம்; பெற்றோருடன் இருப்போம்' என எண்ணினான்: அவ்வாறே கிளம்பினான். சாமான்களைக் கட்டுகிற போது அழைப்பிதழ்கள் அடங்கிய பெரிய காகித உறை கண்ணில் பட்டு அவன் நெஞ்சத்தைப் பிழிந்தெடுத்தது.

யோகம் எப்போது வரும்? யாராலும் அறுதியிட்டுக் கூற முடியாத புதிர். பாலசுந்தரத்தின் கலை வாழ்க்கையில் அது புரியாத புதிராகவே இருந்து வந்தது. அவன் முயன்ற போது யோகம் ஒளிந்து விளையாடிற்று: அவன் வாழ்க்கையையே வெறுத்த போது அந்த யோகம் அவனைத் தேடி வந்து மாலையிட்டது. மெல்ல மெல்ல மேடைக் கச்சேரிகள் தொடரலாயின. புகழ் எங்கும் பரவலாயிற்று. சம்மானமும் நாளுக்கு நாள் உயர்ந்து கொண்டே போயிற்று. ஆனால்.... அவனிடம் உற்சாகம் அணுவும் இல்லை.

கோயமுத்தூரில் ஒரு திருமணம். அதில் பாலசுந்தரத்தின் கச்சேரி. பக்க வாத்தியங்களுடன் அவன் சென்றான். ரயில் தாமதித்துச் சென்றதால் உரிய நேரம் கடந்து விட்டது. அதனால் அங்கே இங்கே தங்காமல், அலங்காரம் எதுவும் இல்லாமல், சிற்றுண்டி காப்பிகூட அருந்தாமல் கலைஞர்கள் நேரே மேடையை அடைய வேண்டியதாயிற்று. அந்தப் பரபரப்பில் பாலசுந்தரம் யாரையும் பார்க்கவில்லை; எதையுமே கவனிக்கவில்லை. பந்தல் முகப்பில் வரவேற்பு நிகழ்ச்சியை முன்னிட்டுச் சோபாவில் அமர்ந்திருந்த திருமணத் தம்பதிகளையும் அவன் ஏறிட்டுப் பார்க்கவில்லை.

கச்சேரி முடிந்தது. திருமண நிர்வாகிகளில் ஒருவர் வந்து கலைஞர்களுக்காகத்




என்னுடைய நண்பன் ஒருவன், அவன் பொழுது போக்கு ஸ்டாம்பு சேகரித்தல். அவனிடம் ஒரு நாள் உன்னிடம் எவ்வளவு ஸ்டாம்புகள் இருக்கின்றன என்று கேட்டேன்.

அவன் கூறிய பதில்: என்னிடமுள்ள தபால் தலைகளை 2ஆல் வகுத்தால் மீதி 1; 3ஆல் வகுத்தால் மீதி 2; 4ஆல் வகுத்தால் மீதி 3; 5 ஆல் வகுத்தால் மீதி 4; 6ஆல் வகுத்தால் மீதி 5; 7ஆல் வகுத்தால் மீதி 6; 8ஆல் வகுத்தால் மீதி 7; 9ஆல் வகுத்தால் மீதி 8 வரும். 10 ஆல் வகுத்தால் மீதி 9 என்று அடுக்கிச் சொன்னான். எங்கே நீங்கள் விடை சொல்லுங்கள், பார்க்கலாம்!

தகவல்: எஸ். கே. சண்முகம்
ஆதாரம் : 'காரவன்'.

விடை : 2519

திட்டம் செய்திருந்த விடுதிக்கு அவர்களை அழைத்துச் சென்றார். நிர்வாகி, பக்க வாத்திய வித்துவான்கள், பாலசுந்தரம்— இப்படி வரிசையாகப் பந்தலில் போய்க் கொண்டிருக்கையில் முதிய ரசிகப் பிரமுகர் ஒருவர் குறுக்கிட்டு, பாலசுந்தரத்தின் இசையைப் பாராட்டினார். மற்றவர்கள் போய் விட்டார்கள். ரசிகப் பிரமுகரும் நகர்ந்தபின் பாலசுந்தரம் நடக்கலானான். அப்போது...

அழகே வடிவான அணங்கு ஒருத்தி அவனை அணுகினாள்; வணக்கம் தெரிவித்து அடக்கமாக நின்றாள். அவளை அங்கே கண்டதும் அவன் திகைத்தே போனான். ''யாரம்மா? ஜலஜாவா?.... இங்கே எங்கே வந்தாய்?'' என்றான். மூன்று ஆண்டுகளுக்குப்பின் அவன் முகத்தில் ஒரு மலர்ச்சி; உள்ளத்தில் ஒரு நெகிழ்ச்சி.

ஜலஜா இலேசாகச் சிரித்தாள். ''கச்சேரிக்கு ஏற்பாடு செய்தவர்கள் உங்களுக்கு அழைப்பிதழ் அனுப்பவில்லையா?'' என்று கேட்டுக் கொண்டே அவன் தனி இடம் நோக்கி நடந்தாள் ; அவன் அவளைத் தொடர்ந்தான்.

''கச்சேரி முந்தா நாள்தான் தந்தி மூலம் உறுதியாயிற்று. அழைப்பிதழில் என் கச்சேரி என்று அச்சிட வாய்ப்பு இல்லாததாலோ, நெருக்கடி காரணமாகவோ எனக்கு அவர்கள் அழைப்பிதழ் அனுப்ப வில்லை என்று நினைக்கிறேன்.''

''அதனாலேதான், 'இங்கே எங்கே வந்தாய்?' என்று நீங்கள் என்னைக் கேட்டீர்கள் போல் இருக்கிறது. திருமணத் தம்பதிகளையும் நீங்கள் இது வரை பார்க்க வில்லையா? கல்யாணம் யாருக்குத் தெரியுமா?''

பாலசுந்தரம் தன் இதயப் பகுதியைக் கையால் அழுத்திக் கொண்டான்.

பாலசுந்தரம் பொறுமை இழந்தான். ''ஜலஜா...! இப்படி வம்பளக்கும் அள

ருக்கு உனக்கு எப்போது முதல் வாய் வளர்ந்தது?'' என்று கடிந்தாள்.

அவன் கலகலவென்று சிரித்தான். ''இவ்வளவு கோபமாகப் பேசும் பழக்கம் உங்களுக்கு எப்போது முதல் ஏற்பட்டது?.... அ.... அதோ பாருங்கள்!''

அவள் காட்டிய திசையில் அவன் பார்வையை ஓட்டினான். ஊருக்குச் செல்லப் புறப்படும் குடும்பத்தினரிடம் பேசிக் கொண்டிருந்தான் முரளி. அவன் கழுத்தில் மாலை இருந்தது. அவன் அருகே ஒரு பெண் நின்று கொண்டிருந்தாள். அவள் கழுத்திலும் மாலை இருந்தது.

''கல்யாணம் முரளி அண்ணாவுக்குத் தான்!'' என்றாள் ஜலஜா. 'அப்பாடா!' என்றது பாலசுந்தரத்தின் உள்ளம்.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆




கொலம்பியா பல்கலைக் கழகத்துப் பேராசிரியரான வான் அம்ரிங் இரு பாலரையும் சிறுமிகளையும் ஒரே வகுப்பில் வைத்துக் கல்வி புகட்டக் கூடாது என்ற கொள்கையை உடையவர். 'வகுப்பில் ஒரு பெண் இருந்து விட்டால் பையனுக்குக் கணிதத்தைப் புரிய வைக்கவே முடியாது' என்றார்.

அப்போது அங்கேயிருந்த ஒருவன் ''பேராசிரியரே! எல்லாப் பையன்களும் நீங்கள் சொன்னபடியே இருப்பார்களா? அதற்கு விலக்காக இருக்கக் கூடிய பையனும் இருக்கத் தானே செய்வான்?'' என்று கேட்டான்.

அதற்குப் பேராசிரியர், 'இருக்கலாம். அப்படிப் பட்டவர்களுக்குச் சொல்லிக் கொடுக்கவேண்டிய அவசியமில்லையே'! என்று பதில் சொன்னார்.

— பாலன்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''அவன்தான் என்னை உங்களிடம் அனுப்பினான்.''

''அப்படியா?....'' என்று பாலசுந்தரம் மீண்டும் முரளி இருந்த திசையை நோக்கினான். அங்கிருந்து ஒரு ஜோடிக் கயல் விழிகள் தன்னை ஊடுருவுவதைக் கண்டான். 'பத்மஜாவா இவள்! நலிந்து மெலிந்து உரு மாறி இருக்கிறாளே!' என்று எண்ணிக் கொண்டான். பலவித உணர்ச்சிகளின் மோதலில் அவன் நெகிழ்ந்தான். அதை உணர்ந்த ஜலஜா மேலும் பேசினாள்.

''இந்தக் கல்யாணத்தோடு எனக்கும் திருமணம் நடப்பதாக இருந்தது. பேச்சு வார்த்தை நின்று விட்டது.''

''அடடே.... உனக்குமா அப்படி? ஏன் ஜலஜா!''

''முதலில் நான் மறுத்தேன். விவரம் தெரிந்தபின் அவர்களும் அந்த ஆசையை விட்டு விட்டார்கள். தமக்கை கன்னிக் கோலத்தில் நிற்க.....''

''ஓ!.... பத்மஜா இன்னும்....''

''ஆமாம். அவளுடைய உறுதி பாறையினும் கடினமாயிற்றே!''

பாலசுந்தரத்திடம் ஜில்லென்று ஓர் உணர்ச்சி பரவியது.

''உங்களைக் கண்டுபிடிக்க அண்ணா எவ்வளவோ முயன்றான்.''

''ஆமாம்; நீங்கள் ஏன் திடீரென்று பங்களாவை விற்றுவிட்டு.....?''

''கொள்கை, வேதாந்தம் எல்லாம் ஓர் அளவுக்கு மேல் நிலைப்பது கடினம்தானே? அம்மாவின் பிரிவால் அப்பா மனமுடைந்து போய் விட்டார். பல காலம் அவர் நடமாடிய பங்களாவில் அவரால் நிம்மதியாக வசிக்க முடியவில்லை. மேலும் ஒரு மாதத்தில் 'ரிடையர்' ஆன அவர் படுக்கையில் விழுந்தார். வர வர அவர் நிலை கவலைக்கு இடமாயிற்று. குடும்ப டாக்டரும் வற்புறுத்தவே பங்களாவை விற்று, சென்னையை விட்டு மதுரைக்குச் சென்றோம். அதுதான் எங்கள் ஊர். அங்கே நிலபுலன், வீடு வாசல் எல்லாம் உண்டு. அண்ணாமட்டும் ஹோட்டலில் தங்கிப் படிப்பைத் தொடர்ந்தான்; உங்களைத் தேடித் தெருத் தெருவாய் அலைந்தான்; பிறகு மதுரையை அடைந்து வேலையில் அமர்ந்தான். அம்மாவின் பிரிவுத் துயரம், பத்மஜாவின் கன்னிக் கோலம் இரண்டினாலும் அப்பா மிகவும்.....''

பாலசுந்தரம் பதைத்தான். ''அப்பா இப்பொழுது எங்கே ?''

''மாடியில் படுக்கையில் இருக்கிறார்; வாருங்கள் போகலாம்.''

இருவரும் நடந்தார்கள். அவர்கள் பின்னே முரளி, அவன் மனைவி ஷீலா, பத்மஜா மூவரும் சென்றார்கள். அங்கே பங்கஜாவும் அவள் கணவன் கல்யாணமும் வேதாசலத்திடம் பேசிக் கொண்டிருந்தார்கள். பாலசுந்தரத்தைப் பார்த்த வேதாசலம், ''கச்சேரி பிரமாதம்!'' என்றார்.

அவர் பேச்சைக் கேட்டு, அவர் முகத்திலே மலர்ச்சியைக் கண்டு, அனைவரும் மகிழ்ச்சி கொண்டு நெடுமூச்செறிந்தார்கள்.

''இந்தப் பைத்தியக்காரப் பெண் பத்மஜா தன் உறுதியிலிருந்து தளரவே இல்லை பாலசுந்தரம். நீங்கள்.....''

''எளியவனாகிய நானும் உங்கள் தொடர்பை விரும்பி மேற்கொண்ட தவ நிலையிலிருந்து பிறழவே இல்லை'' என்ற பாலசுந்தரம் வெட்கத்துடன் கூறி முடிப்பதற்குள் முரளி, ''அப்படியானால் அடுத்த முகூர்த்தத்தில், மதுரையில் 'ஜாம் ஜாம்' என்று திருமணம் நடத்த வேண்டியதுதான்!'' என்றவன் பத்மஜாவிடம், ''என்ன இருந்தாலும் இலட்சியக் காதல் தோல்வியுறுமா?'' என்றான். அவள் நாணித் தலை கவிழ்ந்தாள்.







G.E.C.




---







சக்திக்கும், வலிமைக்கும்!




ஊட்டப்பொருள்கள் அனைத்தும் ஒருங்கே தேவையா? ஒரு கப் போர்ன்விடா அருந்துங்கள். தசைகள் வளர புரதங்களும், சக்திக்கும் வலிமைக்கும் புஷ்டியான மாவுச்சத்தும், எலும்புகளை வலுவாக்க தாது உப்புக்களும், பூரண ஆரோக்கியத்திற்கு மிக்க அவசியமான வைட்டமின்களும் இதிலே உள்ளன. மிகச்சுவையாக தயாரிக்கலாம். காலையில் உற்சாகத்துடன் எழுந்திருக்க வேண்டுமா? இரவில் அமைதியாக உறங்க வேண்டுமா? போர்ன்விடா அருந்துங்கள்.

காட்பரீஸ் போர்ன்-விடா



# சேவைக்கு ஒரு சகோதரி

மோனிகாஃபெல்டன்
– அருந்தமா

சுப்பிரமணிய ஐயரும் விசாலாட்சியும் தங்களுக்காகக் கட்டிக் கொண்ட வீட்டின் மாடியில் பெரிய கூடம் ஒன்று இருந்தது. குடும்ப மகாநாடு இங்கு தான் கூடும். இங்கு குடும்பத்தினரும், அவர்கள் அழைத்திருந்த சிநேகிதர்களும் அமர இடம் தாராளமாக இருந்தது.

ஒருநாள் எல்லாரும் மகாநாட்டின் காலை நிகழ்ச்சிக்குத் தயாராகிக் கொண்டிருக்கையில், ஒரு விதவை வீதி வழியாக வந்து கொண்டிருப்பது தெரிந்தது. அவள் இறுக்கமாக முக்காடு இட்டுக் கொண்டு தலைப்பின் ஒரு நுனியினால் தன் கண்களைத் துடைத்துக் கொண்டே தலைகுனிந்து வந்தாள். சகோதரியினுடைய மருமான் ஒருவன் வெளியே சென்று அவளுக்கு என்ன வேண்டும் என்று கேட்டான்.

''இதுதான் மதிப்புக்குரிய சகோதரி சுப்புலக்ஷ்மி இருக்கும் இடமா?'' என்று அந்தப் பெண் விசும்பல்களுக்கிடையே உடைந்த குரலில் கேட்டாள்.

''ஆமாம்.''

''என்னை அவர்களிடம் அழைத்துச் செல்லுங்கள்.''

கஷ்டத்தில் வரும் யாரையும் திருப்பி அனுப்புவதைச் சகோதரி அனுமதிக்க மாட்டாள் என்பதைக் குடும்பத்திலுள்ள யாவரும் அறிவர். தோள்கள் குலுங்க அழுது கொண்டிருந்த முன்பின் தெரியாத அந்த அம்மாள் சகோதரி இருக்கும் அறைக்குள் அழைத்துச் செல்லப்பட்டாள்.

அவர்கள் இருவரும் தனியாக விடப்பட்டனர். ஒரு நிமிஷம் கழித்து அங்கு பெருத்த சிரிப்பொலி கேட்டது. குடும்பத்தினர் எல்லோரும் அந்த அறைக்குப் பாய்ந்து சென்று நோக்கினார்கள். அழுது புலம்பிய அவ்விதவையைக் காணோம். அதற்குப் பதில் பழைய நண்பர் ஒருவரைத்தான் பார்த்தார்கள். அவர் குடும்ப மகாநாட்டின் தமாஷில் கலந்துகொள்ள இப்படி ஒரு வேடிக்கையைச் செய்திருந்தார்.

சகோதரிக்கு அது வேடிக்கையாகத் தோன்றவில்லை. ஆனால் சித்தி மிகவும் ரசித்தாள். அதே சமயத்தில், அவள் பொறுக்க முடியாத வலியில் தவித்துக் கொண்டுமிருந்தாள். அவளுடைய சிறு நீரகங்கள் வேலை செய்ய வில்லை. வலக்கால் ஏகமாக வீங்கிக் கிடந்தது. என்ன செய்தும் ஜுரம் குறையவேயில்லை.

அவளுக்குக் குணமாகாது என்று யாராலும் நம்ப முடியவில்லை. சகோதரி ஜனவரி மாதத்தில் மீண்டும் உத்தியோகத்துக்குப் போன போது, தன்னுடைய அருமையான சித்தியைக் கடைசி முறையாகப் பார்க்கிறோம் என்று உணரவில்லை. 1935ம் வருடம் ஜனவரி மாதம் 25ந் தேதி சித்தியின் மரணம் நெருங்கி விட்டதென்று தந்தி வந்தது. உலகத்தில் எல்லாரையும்விடச் சித்தியிடம்தான் சுப்புலக்ஷ்மி கடமைப்பட்டிருந்தாள். உடனே சென்னைக்குக் கிளம்பி விட்டாள் அவள். ஆனால் அவள் வீட்டுக்கு வந்து சேரு முன்னரே சித்தி – அந்த உன்னதமான இன்றியமையாத வாலாம்பாள் இறந்து விட்டிருந்தாள்.

சுப்புலக்ஷ்மிக்கு மட்டுமல்ல, குடும்பத்தினர் யாவருக்குமே சித்தி இல்லாமல் வாழ்வது சாத்தியமாகவே தோன்றவில்லை. எனினும், வாழ்க்கை தொடர்ந்து நடக்க வேண்டியிருந்தது. செய்ய வேண்டிய காரியங்களும் இருந்தன. வித்தியாலயம் நிரம்பி வழிந்தது. அது இன்னும் வளர்ச்சி பெற வேண்டுமானால் இன்னும் பணம் திரட்ட வேண்டும். உதவி செய்வதற்கு இப்போது சித்தி இல்லாததால் மாதர் சங்கம், அதை ஒட்டிய நூலகம் ஆகியவை குறித்தும் அதிகக் கவனம் செலுத்தவேண்டியிருந்தது. சுப்புலக்ஷ்மி கடலூருக்குத் திரும்பிச் சென்ற போது அங்கும் கவனிக்கப்பட வேண்டிய பல பிரச்னைகள் காத்திருந்தன.

மற்ற எல்லோரையும்விட சித்தி இல்லாததால் அதிகமான மனச் சங்கடத்துக்கு ஆளானது சுப்புலக்ஷ்மியின் தாயார்தான். இத்தனை ஆண்டுகளாக அவர்கள் இருவரும் ஒன்றாக வசித்து, ஒன்றாகப் படித்தனர், ஒன்றாக வேலை செய்தனர். ஆகவே, சித்தி மறைந்த பின் விசாலாட்சியும் வாட ஆரம்பித்தது இயற்கையாகவே தோன்றியது. கோடை விடுமுறையில் சுப்புலக்ஷ்மி மீண்டும் சென்னைக்கு வந்தபோது வழக்கம்போல் விடுமுறைக்காகக் குடும்பத்தினர் வெளியூர் செல்வதைப் பற்றி யோசிக்கக்கூட இடமில்லை. சில நாட்களாக நீரிழிவினால் வருந்திக் கொண்டிருந்த சகோதரியின் தாயார் மிகவும் பலஹீனமாக இருந்தாள். ஜூலை மாதம் பிறந்த போது அவள் இனி வெகு நாட்கள் இருக்க மாட்டாள் என்பது வெளிப்படையாயிற்று. ஜூலை 22ம் தேதி சுப்புலக்ஷ்மி தன்னுடைய குறிப்புப் புத்தகத்தில் இவ்வாறு எழுதினாள். "இன்று காலை சுமார் எட்டரை மணிக்கு உன்னதமான, உத்தமமான அந்த ஆத்மா ஈச்வரனுடன் ஒன்றி விட்டது. இந்தப் பிரிவைத் தாங்கவே முடியவில்லை. ஆண்டவன்தான் எங்களைக் காப்பாற்ற வேண்டும்."

துன்பத்தை மறக்க அவளுக்கிருந்த அலுவல்கள் ஓரளவுக்குப் பயன்பட்டன. இத்தனை நாட்களாய்க் கடமையாக மட்டுமே நினைத்துத் தன் காரியங்களைச் செய்து வந்தாள் அவள். இன்று மன ஆறுதலை நாடியே அலுவல்களிடையில் ஒண்டிக் கொண்டாள், தஞ்சம் புகுந்தாள். கடலூரின் கலெக்டரும் அவர் மனைவியும் சகோதரியின் நெருங்கிய தோழர்களாகி விட்டிருந்தனர். சுப்புலக்ஷ்மிக்கு அவர்கள் வீட்டில் எப்போதும் வரவேற்பு உண்டு. வேறு சில புதிய நண்பர்களும் கிடைத்திருந்தனர்.

இருந்தாலும் சுப்புலக்ஷ்மி தனிமையை உணர்ந்தாள். வாழ்நாள் முழுதும் தன் உடன் இருந்தவர்களை மீண்டும் காணமாட்டோமா என ஏங்கினாள்.

பழைய மாணவிகளிடமிருந்து கடிதங்கள் வந்தன. சித்தி, சுப்புலக்ஷ்மி, விசாலாட்சி மிஸ் ட்ரைஸ்டேல், மிஸ் பிரேசர் யாவரும் கண்ட லட்சியக் கனவுகள் நனவாகிக் கொண்டிருந்தன. பார்வதியும் செல்லமும் மற்றும் பல பெண்களும் உயர்நிலைப் பள்ளிகளில் ஆசிரியைகளாக இருந்தனர். ஸ்திரீகள் வைத்திய சர்வீஸில் (Women's medical service) சேர்ந்துவிட்ட சீதா, பிரிட்டனில் மருத்துவம், அறுவை சிகிச்சை இரண்டிலும் பல பட்டங்களைப் பெற்றிருந்தாள். இப்போது ஆங்கிலத்திலுள்ள எல்லா எழுத்துக்களும் பட்டங்களாக அவள் பெயரின் பின்னால் இருப்பதாகச் சகோதரி பெருமிதத்துடனும் ஆசையாகவும் குறிப்பிடுவதுண்டு. லேடி டஃப்ரின் பெண் ஆஸ்பத்திரிகளுள் ஒன்றுக்கு அவள் தலைவியாக இருந்து வந்தாள். அவளுடைய தங்கை சென்னை சர்வகலாசாலையில் பட்டம் பெற்று, பிறகு சிறிது காலம் ஆசிரியையாகப் பணி புரிந்துவிட்டு, இப்போது தனக்குப் பொருத்தமான தகுந்த கணவனை அடைந்து சந்தோஷமாக இருந்தாள். ஒரு போலீஸ் உத்தியோகஸ்தரைப் போல் தோற்றமளிப்பதாக அனைவராலும் வேடிக்கையாகக் கருதப்பட்ட அலமேலு மூன்று குழந்தைகளுக்குத் தாயான பின்னர் ஸ்தாபனத்தில் வந்து சேர்ந்தாள். அவள் இப்போது பர்மாவுக்குச் செல்லும் கப்பல் ஒன்றில் பெண்களையும் குழந்தைகளையும் கவனித்துக் கொள்ளும் உத்தியோகத்தில் இருந்தாள். பெரிய சரஸ்வதி, பள்ளிக்கூடங்களுக்கு இன்ஸ்பெக்டராக இருந்தாள். சின்ன சரஸ்வதி இந்திய தேசிய காங்கிரஸில் சேர்ந்து 1930ம் ஆண்டு சிறைசென்றிருந்தவள். அவள் இப்போது சுதேச சமஸ்தானமொன்றில் ராஜாவின் குழந்தைகளுக்குப் பாடம் கற்பித்துக் கொண்டிருந்தாள். கமலா என்பவள் மிகவும் அமரிக்கையான அழகான பெண். ராணி மேரி கல்லூரியில் படித்துப் பட்டம் பெற்று மறுமணம் செய்து கொண்டு இப்போது தன் கணவனின் ஆதரவுடன் தன் ஓய்வு நேரத்தை எல்லாம் சமூக சேவைக்கு அர்ப்பணித்து வந்தாள்.

இது போன்ற கடிதங்களைப் படிப்பதற்கே ஆனந்தமாக இருந்தது.

சுப்புலக்ஷ்மிக்கு உள நிறைவும் மகிழ்ச்சியும் அளித்த இத்தகைய கடிதங்களைத் தவிர அவளைத் துயருறச் செய்த பரிதாபகரமான கடிதங்களும் இன்னமும் வந்து கொண்டிருந்தன. அடிமைகளிலும் கேவலமாக நடத்தப்பட்ட இளம் விதவைகள், மாற்றாந் தாயினால் கொடுமைப்படுத்தப்பட்ட சிறுமிகள் போன்றோர் சகோதரியின் உதவி நாடிக் கடிதங்கள் எழுதினர்.

அவர்களுக்கெல்லாம் தன்னால் முடிந்த மட்டில் சகோதரி உதவி வந்தாள். சிலர் வித்யாலயத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். தான் கடலூரில் செய்து கொண்டிருந்த வேலையைச் சகோதரி குறைத்து மதிப்பிடாவிட்டாலும், இது போன்ற கடிதங்களைப் பார்க்கும்போது சுப்புலக்ஷ்மிக்குச் சென்னைக்குத் திரும்ப வேண்டும் என்று தோன்றிவிடும். தன் தாயாரும் சித்தியும் லேடி சதாசிவ ஐயரும் இல்லாததால் சென்னையில் தான் இப்போது இருப்பது முன்னைவிட மிகவும் அவசியம் என்று அவள் கருதினாள். மற்றெல்லா வேலைகளையும்விட, இளம் விதவைகளுக்கும், தள்ளி வைக்கப்பட்ட மனைவிகளுக்கும் நாளைய தலைமுறையினரின் தாய்களாக விளங்கவிருக்கும் பெண்களுக்கும் தான் செய்து வரும் பணியை மேலும் விரிவுபடுத்த வேண்டியதுதான் உடனடித் தேவை என்று அவள் திடமாக நம்பினாள்.

வித்தியாலயத்தில் படித்துத் தேறிய சில பெண்கள் முதலில் உபாத்தியாயினியாக வேலை செய்ய ஆரம்பித்த போது அந்தந்தக் கிராமங்களின் மதிப்புள்ள மனிதர்கள் அவர்களை விலக்கியே வைத்திருந்தனர். விதவைகள் தலைமயிர் வைத்துக் கொண்டிருப்பதும், நல்ல குடும்பங்களில் பிறந்த இளம் பெண்கள் வெளியே சென்று ஊதியத்துக்கு வேலை செய்வதும் மிகவும் அக்கிரமமானது என்று ஆடவரும் பெண்டிரும் கூறினார்கள். அந்த இளம் ஆசிரியைகள்



## உலகின் மிகப் பெரிய அலுவலகம்

உலகின் மிகப் பெரிய அலுவலகம் எது என்று உங்களுக்குத் தெரியுமா? அமெரிக்காவிலுள்ள "பென்டகன்" என்ற அலுவலகம்தான். இதன் பரப்பளவு சுமார் 29 ஆயிரம் ஏக்கர். இதில் மொத்தம் 27 ஆயிரம் பேர்கள் வேலை செய்கின்றனர். இதைக் கட்ட ஆன செலவு நாலு கோடி பவுன்கள். இந்த "பென்டகன்" அமெரிக்கப் பாதுகாப்பு இலாகாவின் தலைமை அலுவலகம். இது வாஷிங்டனில் இருக்கிறது. இதை அமெரிக்க இராணுவ இன்ஜினியர்கள் இரண்டாவது உலக யுத்தத்தின் போது பதினாறு மாதங்களில் கட்டி முடித்தனர். இதில் வேலை செய்யும் ஒவ்வொருவரும் தினமும் 150 மாடிப் படிகளில் ஏறுகின்றனர். குறைந்தது 13 லிப்டுகளில் செல்கின்றனர். ஒவ்வொருவரும் இந்தக் கட்டடத்திலுள்ளேயே தினமும் நடக்கும் தூரம் சராசரியாகப் பதினேழரை மைல்கள். இங்கு தினமும் 35 ஆயிரம் டெலிபோன் தொடர்புகள் நடைபெறுகின்றன. தினமும் ஆயிரக்கணக்கான மின்சார விளக்குகள் பழுதாகி மாற்றப்படுகின்றன. ஆதாரம் "வீக் என்ட்"

தகவல் பெ. சம்பத்குமார்

இந்த நிந்தனையைப் பொறுத்துக் கொண்டு, தங்கள் வேலைகளில் நிலைத்து நின்றனர். தங்களுடைய அடக்கத்திலும் மாணவ மாணவிகளிடம் தங்களுக்கிருக்கும் செல்வாக்கின் காரணமாகவும் நிந்தனையாளரின் மனத்தை மாற்றினர். இதன் பின்னர் அவர்கள் ஆசிரியைகளாகப் பணியாற்றிய பள்ளிகள் நிரம்ப ஆரம்பித்தன. சிறிது சிறிதாக அந்த ஆசிரியைகள் அந்தக் கிராமத்தின் வாழ்க்கையில் ஒன்றி, எதிர்காலத்தை நிர்ணயிக்கும் பொறுப்பு வாய்ந்தவர்களாக ஆகி விட்டனர்.

இன்னும் இவர்களைப் போல் நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான பேர்கள் தேவைப்பட்டனர். தம் பெண்களைப் படிக்க வைக்க வேண்டியதன் அவசியத்தை உணர்ந்த பெற்றோர்களின் எண்ணிக்கை வேகமாக அதிகரித்துக் கொண்டே வந்தது. சென்னை நகரத்தில் அநேக புதிய உயர்நிலைப் பள்ளிகள் நிறுவப்பட்டும், வளர்ந்து கொண்டே வரும் தேவையைப் பூர்த்தி செய்ய இயலவில்லை. 1936ம் வருடத்துக்குள் சாரதா வித்தியாலயத்தில் அதன் பல்வேறு பகுதிகளைச் சேர்ந்த மாணவிகளின் எண்ணிக்கை மூந்நூறுக்கு மேலாகி விட்டது. மேலும், இட வசதியளிக்க முடிந்திருந்தால், இன்னமும் நிறையப் பேர்கள் சேர்ந்திருப்பார்கள். எப்படியும் அதற்குத் தேவைப்பட்ட இடத்தைக் கண்டு பிடித்தாக வேண்டும் என்று சகோதரி தனக்குள் தீர்மானித்துக் கொண்டாள்.

கடலூரில் உத்தியோகம் பார்த்து வந்த அவள், ஒரு வருஷ விடுமுறை கோரிப் பெற்றதும் சென்னைக்கு விரைந்தாள்.

"மாம்பலத்தில் வித்தியாலயத்துக்கு ஒரு கட்டடம் எழுப்ப முன்பு ஒருவர் மனமுவந்து கொடுத்த நிலத்தை மறுத்தது எவ்வளவு தவறு என்பதை இதற்குள் உணர்ந்து விட்டிருந்தேன். ஆகவே, நான் போய் அவரைக் கண்டு, 'அந்த இடம் இப்போது கிடைக்குமா?' என்று கேட்டேன். இடம் இருந்தது. ஆனால் அதில் தேங்கி நின்ற நீரை வடிய வைக்க ஏகமாகச் செலவழித்து விட்டிருந்தபடியால் இப்போது அதை எங்களுக்கு நன்கொடையாகத் தர இயலாது என்றார் அவர். ஒரு விலையைக் குறிப்பிட்டார். அது நியாயமாகப் படவே, நான் உடனே ஒத்துக்கொண்டு விட்டேன்" என்று சகோதரி என்னிடம் இன்று கூறினார்.

நிலத்துக்குண்டான விலையைத் தந்த பிறகும் சாரதா மாதர் சங்கத்தின் கல்விக் கமிட்டியிடம் ஓரளவுக்குப் பணமிருந்தது. ஆனால் அதற்குச் சரி சமமான தொகை அரசாங்கத்திடமிருந்து கிடைத்தாலும்கூட— இந்த இரட்டிப்புத் தொகை அவர்களுக்குத் தேவைப்பட்ட கட்டடங்களை யெல்லாம் கட்டுவதற்குப் போதாது. இன்னும் பணம் திரட்டப் பெரிய முயற்சி எடுத்தாகவேண்டும். முன்னையெல்லாம் விடக் கட்டடச் செலவுகள் அதிகரித்து வந்தன. அவர்களுடைய திட்டம் நிறைவேறுவதற்குப் போதிய பணம் சேகரிப்பதற்கு எத்தனையோ வருடங்களாகி விடும் என்பதைச் சகோதரியும் கமிட்டி அங்கத்தினர்களும் உணர்ந்தார்கள். ஆகவே, இதற்கிடையில் வித்தியாலயத்துக்காகத் தாற்காலிகமாக வேறோர் இல்லம் தேடியாக வேண்டும் என முடிவு செய்தார்கள்.

சகோதரி அதிகக் கஷ்டமில்லாமல் ஒன்றைத் தேடிப் பிடித்தாள். "நாங்கள் விரும்பிய அளவு பெரிதாக இல்லாவிட்டாலும், அது மிகவும் ரம்மியமானதோர் இடம். ஆசிரியைகளும் சந்தோஷமாக அதில் குதித்து விட்டார்கள். அங்கு அவர்கள் சுமார் இரண்டு ஆண்டுகள் இருந்த பிறகு தான் அந்த அதிசயம் நடந்தது" என்று சகோதரி என்னிடம் கூறினார்.

"அதிசயமா?"

அவர் சிரித்தார். "உண்மையில் அது ஓர் அதிசயமாகத்தான் தோன்றியது. அப்படி ஒரு சம்பவம் நேருமென்று நான் எதிர்பார்க்கவில்லை. கனவிலும் நினைத்ததில்லை."

சுப்புலக்ஷ்மி விடுமுறை முடிந்து கடலூருக்குத் திரும்பி அங்கு சில மாதங்கள் இருந்தாள். பிறகு, ராஜமந்திரியில் ஒரு பெரிய ஆசிரியர் பயிற்சிப் பள்ளி, உயர்நிலைப் பள்ளி ஆகியவற்றின் தலைமைப் பொறுப்பை ஏற்க

**பிப்ரவரிக்கு மட்டும் ... ... ... ...**

ஜூலியஸ் சீஸர் என்ற பெயர் கொண்ட மாமன்னன் தன் பெயரைக் கொண்ட மாதமான ஜூலையை ஒரு நாள் அதிகமாகக் கொண்ட மாத மாக வேண்டுமென்று ஆசைப்பட்டான். இதற்காக பிப்ரவரியில் இருந்த ஒரு நாளைக் கைப்பற்றிக் கொண்டான். இதைத் தொடர்ந்து அகஸ்டஸ் என்ற வீரனும் தனது பெயரைக் கொண்ட ஆகஸ்டு மாதத்துக்கு இன்னொரு நாளை பிப்ரவரியில் இருந்து வாங்கிச் சேர்த்துக் கொண்டான். மற்ற மாதங்களுக்குக் கடன் கொடுத்த காரணத்தால் இருபத்தெட்டு நாட்களாக மாறியது. ஆம், மற்றவர்களுக்குக் கடன் கொடுத்தே தேய்ந்து விட்டது பிப்ரவரி.

--மல்லிகை மணாளன்

**... ... ... ... 28 நாட்கள் ஏன் ?**

---

அனுப்பப் பட்டாள். இப்பொழுது அதிருஷ்டவசமாக அவளை மீண்டும் லேடி வில்லிங்டன் பயிற்சிக் கல்லூரியில் பழைய வேலைக்கே மாற்றி விட்டார்கள்! மறுபடியும் கல்லூரியிலிருந்து அரை மைல் தொலைவி லேயே, எட்வர்டு எலியட்ஸ் ரோடில் உள்ள அவர்களது குடும்பக் காலனியிலேயே அவள் வசிக்க ஆரம்பித்தாள். இது நடந்தது 1938 ஆம் ஆண்டில்.

''ஒரு நாள் மாலை எங்கள் குடும்பத்தின் நீண்ட நாள் நண்பரும் ராமகிருஷ்ணமிஷன் மாணவர் இல்லத்தை ஆரம்பித்து வைத்த வருமான ஸ்ரீ ராமானுஜாச்சாரியார் எதிர் பாராதவிதமாகத் திடீரென்று என்னைக் காண வந்தார். அவர் மிகவும் பெரிய மனிதர். நிர்வாகப் பொறுப்புக்களில் நிபுணர். ராம கிருஷ்ண மிஷனின் சென்னைக் கிளைக்குச் செயலாளராகப் பணியாற்றி வந்தார்.''

ராமானுஜாச்சாரியார் சகோதரியிடம் வந்து வித்தியாலயத்தை ராமகிருஷ்ண மிஷனே ஏற்று நடத்தத் தயாராக இருப்பதாய்ச் சொன்னார். சகோதரி இன்று என்னிடம் அதைப் பற்றிப் பேசிய போது பெரிய புன் முறுவல் ஒன்று அவர் முகத்தில் பரவியது.

''அதைவிட அதிகமான ஆச்சரியத்தை நான் எப்போதும் அடைந்ததில்லை. நான் உடனே இந்த யோசனைக்கு ஒத்துக் கொண்டு விட்டேன்.

''என்னிடம் தோன்றிய ஆனந்தத்தைக் கவனித்த ஸ்ரீ ராமானுஜாச்சாரியார் என்னைப் பார்த்து, 'ஆனால் இதற்குச் சில நிபந்தனைகள் உண்டு' என்றார். அவர் எதை மனத்தில் கொண்டு பேசினார், தெரியுமா?''

''நீங்கள் கமிட்டியின் செயலாளராகத் தொடர்ந்து பணியாற்ற வேண்டும் என்று தானே ?''

''இல்லை. அதைச் சர்வசாதாரண விஷய மாக எடுத்துக் கொண்டு விட்டேனே நான். வெறுமனேயாவது 'எங்கள் பக்கத்திலும் நிபந்தனைகள் சில இருக்கும்' என்று கூறி வைத்தேன். அவர் அவை என்னவாக இருக் கும் என்று கேட்டார். 'சாரதா' என்ற பெயரை நிலையாக வைத்தாக வேண்டும் என்பதுதான் மிகவும் முக்கியமானது என்று நான் மறுமொழி தந்தேன். நான் அதைக் கூறியபோது அவர் என்னைத் தந்திரமாகப் பார்ப்பதைக் கவனித்தேன். நான் கணித்த படியே அவரும் அதே நிபந்தனையைத்தான் விதிக்கவிருந்தார் என்பது தெரிந்தது. மாதர் சங்கத்திலுள்ள எங்களுக்குச் சாரதா பற்றிப் பேசும்போது சரஸ்வதி தேவியைப் பற்றியும் வித்யாபூஜை செய்வதை பற்றியும்தான் சிந்தனை. ராமகிருஷ்ண மிஷனைச் சேர்ந்த வர்கள் சாரதாவைப் பற்றிப் பேசினால் அவர்களுடைய முதல் சிந்தனை சாரதாமணி தேவியாரைப் பற்றித்தானே இருக்கும் ?'' சகோதரி 'களுக்'கென்று ஒருமுறை சிரித்தாள். ''நாங்கள் இருவருமே திருப்தியடைந்து விட்டோம்!''

''மாதர் சங்க அங்கத்தினர்களும் சம்ம தித்தார்களா ?''

''மனப்பூர்வமாக. நாங்கள் வித்தியாலயத் துடன் எங்கள் தொடர்பை அறுத்துக்கொள்ள வேண்டியும் வரவில்லை; அந்த நிறுவனம் வெகுவாக வலுவடைந்தும் விட்டது. புதிய கட்டடங்கள் கட்டப்பட்டதும் நாங்கள் ஆசை யோடு எதிர்பார்த்தது போலவே அவை பெரியனவாகவும் சீராகவும் இருக்கும் என்ப தும், நாங்கள் மாணவிகளிடையே உரு வாக்கி வந்த சேவை மனப்பான்மை போன்ற நல்லுணர்ச்சிகளெல்லாம் என்றும் இறவாமல் நிலைத்திருக்கும் என்பதும், நிர்வாகத்தினர் வெற்றி காண்பார்கள் என்பதும் எங்களுக் குத் தெரியும். மாதர் சங்கத்தின் எல்லா அங்கத்தினர்களுக்கும் என்னைப் போலவே, பெருத்த மகிழ்ச்சி. நாங்கள் திரட்டி வைத் திருந்த பணத்தை என்ன செய்தோம், தெரியுமா ?''

''என்ன செய்தீர்கள்?''

''சில ஆயிரம் ரூபாய்களை நாங்கள் திட்டமிட்டு வைத்திருந்த இதர நல்ல காரியங்களுக்காக வைத்துக் கொண்டோம். மற்றபடி நாங்கள் வாங்கிய இடத்தையும் இத்தனை வருடங்களாகச் சேகரித்து வைத் திருந்தபணத்தையும் வித்தியாலயத்தில் சேர்ந் திருந்த, இனி சேரப் போகின்ற மாணவி களின் கல்விக்காகவே சமர்ப்பித்து விட் டோம். இத்தனை வருஷங்களுக்குப் பிறகு, ஒரு நல்ல சந்தோஷமான முடிவு ஏற்பட்டு விட்டது, பார்த்தீர்களா?''

''முடிவா?'' நான் திருப்பிக் கேட்டேன். ''உண்மையில் அது ஓர் ஆரம்பமல்லவா ?''

''ஆமாம்'' என்று அவர் ஒப்புக் கொண் டார். ''கண்டிப்பாக அது ஓர் ஆரம்பம் தான். ஆனால் கடந்த இருபத்தைந்து ஆண்டு களாக நாங்கள் செய்தவை எல்லாவற்றையும் கூற வேண்டுமென்று நீங்கள் விரும்பமாட் டீர்கள் என்று நம்புகிறேன்!''

''ஏனோ?''

''ஏனென்றால், சொல்வதற்கு நிறைய இருக்கின்றன. அவ்வளவையும் நீங்கள் எழுதவிருக்கும் ஒரு புத்தகத்துக்குள் அடக்க முடியாது! அது ஒரு தனிக் கதை!'' என்றார் சகோதரி.

## நான்காம் பாகம் முற்றிற்று


தலைவலி


பல்வலி


உடல்வலி


அசௌகரியமான
நாட்களில் வலி...

# ஒரு சின்ன விஷயம்

எஸ். தேவகி

'சே! இப்படியும் ஒரு காரியம் பண்ணுவானோ ஒருத்தன்!..... எவனாவது கேட்டால் காறித் துப்புவான்.... அத்தனை பெரிய மடத்தனம் நாம் செய்திருப்பது....' என்று தமக்குள் நாலாவது முறையாகக் கூறிக் கொண்ட கோபாலசாமி, 'எத்தனை பெரிய முட்டாள் நான்!' என்று தம்மைத் தாமே நொந்து கொண்டும், மேஜையின் மீதிருந்த டெலிபோன் எப்போது மணியடித்துத் தொலைக்குமோ என்று பயந்து நடுங்கிக் கொண்டும் இருந்தார்.

முதலில் நாம் ஒப்புக் கொண்டதே பைத்தியக்காரத்தனம்..... "இல்லையப்பா.... தலையங்கத்தையும் பார்த்துக் கொண்டு விமரிசனத்தையும் எழுதுவது என்பது முடியாத காரியம்... வேண்டுமானால் எடிட்டரிட்டே நானே சொல்கிறேன்...." என்று கூறிக் கத்திரித்துக் கொண்டிருக்க வேண்டும். தாட்சிண்யம் பார்க்கப் போக இப்போது தம் தலைக்கே அல்லவா கத்தி வரும் போலிருக்கிறது..... என்ற உறுத்தல் வேறு அவரைக் குத்திக் குடைந்து கொண்டிருந்தது.

கோபாலசாமி ஒரு பிரபல வாரப் பத்திரிகையின் உதவியாசிரியர்களில் ஒருவர். கோபாலசாமி 'உதவி'களுக்கெல்லாம் தலைமையானவர். பச்சையாகச் சொல்லப் போனால் 'நல்லாயன்' அவர்!.... பத்திரிகையில் வரும் எல்லா விஷயங்களுக்கும் நேரடிப் பொறுப்பு அவருடையதுதான்.

கதை, கட்டுரை விஷயங்களைக் கவனித்துக் கொள்வதற்கென்று தனியாக ஒருவரை ஒதுக்கியிருந்தார் அவர். அதே போல, சினிமா, நாடகம், சங்கீதம் போன்ற கலை விமரிசனங்களை ஒருவரிடம் ஒப்படைத்து விட்டுத் தமக்கென்று அரசியல் பகுதியை ஒதுக்கி வைத்துக் கொண்டிருந்தார் கோபாலசாமி.

உள்ளபடியே ராகவனுக்கும் பொழுது போக்குக் கலைகளில் நல்ல தேர்ச்சியும், ரசிகத் தன்மையும் உண்டு என்பதை அறிந்திருந்ததாலேயே அவனிடம் விமரிசனங்களைத் தள்ளி விட்டிருந்தார். இன்றுவரை அவனும் அவரது மதிப்பீட்டுக்குச் சற்றும் தாழ்ந்து போகாத வகையிலேயே தன் பணியைச் செய்து வந்தான்.

மேஜை மீது விரித்துப் போடப்பட்ட செய்தித் தாள்கள் மின்விசிறிக் காற்றின் கொஞ்சலில் படபடத்துக் கொண்டிருக்க, பழைய 'பாரங்'களும், புதிய 'மெஷின் காப்பி'களும் கட்டுக் குலையாமல் கும்பலாக இடத்தை அடைத்துக் கொண்டிருக்க, பதினைந்து நிமிஷங்களுக்கு முன் கொண்டு வந்து வைக்கப் பட்ட காப்பி என்ற கலவைத் திரவம் ஆறிப்போய் ஏடு தட்டிக் கிடப்பதைக் கூட உணராமல், அவசரம் அவசரமாக அந்த வாரத்துக்கான தலையங்கத்தை எழுதிக் கொண்டிருந்தார் கோபாலசாமி. அப்பொழுது அறைக் கதவைத் திறந்து கொண்டு அவசர அவசரமாக உள்ளே நுழைந்தான் ராகவன்.

"எக்ஸ்க்யூஸ் மீ சார்.... ரொம்ப 'பிஸி'யாக இருக்கிறீர்கள் போலிருக்கிறது...."

"என்ன விஷயம்?"

"ஒரு சின்ன உதவி செய்ய வேண்டுமே நீங்கள்?....."

"........ .......... ........."

"இன்றைக்கு ஒரு புதுப் படம் ரிலீஸ் ஆகியிருக்கிறது.... அதற்கு ஈவினிங் ஷோவுக்கு ஒரு டிக்கெட் இருக்கிறது. நீங்கள் போய்ப் படத்தைப் பார்த்து விட்டு வந்து ஒரு விமரிசனமும் எழுதிவிட வேண்டும். அவ்வளவு தான்.....!"

"ஏன்? நீ போகவில்லையா?"

"இல்லே சார்! என் கல்யாணம் 'செட்டில்' ஆகும் போல இருக்கு. உடனே புறப்பட்டு வரச் சொல்லித் திருச்சியிலிருந்து தந்தி வந்திருக்கு! அதனாலேதான் உங்களைப் படம் பார்க்கச் சொல்கிறேன்......."

"நான் இப்போது எப்படியப்பா சினிமாவிலே போய் உட்கார முடியும்?.... இத்தனை நேரம் என்ன 'லீடர்' எழுதுவதென்று மண்டையைப் போட்டு உடைத்துக் கொண்டாயிற்று. இப்போதுதான் சப்ஜெக்ட் கிடைத்திருக்கிறது. அதை விரிவுபடுத்தி எழுதுவதற்கே நேரம் போதாதே எனக்கு?.."

"சார் சார்... அப்படியெல்லாம் சொல்லக் கூடாது..... உங்களைத்தான் நான் நம்பிக் கொண்டிருக்கிறேன்......"

"ஏன், சுந்தரேசன் இருப்பாரே, அவரை விட்டு எழுதச் சொல்லேன்?....."

"உங்களுக்குத் தெரியாதா விஷயம்?.... அவர் மச்சினரோடே சாத்தனூருக்குப் போகிறதாகச் சொல்லிக் கொண்டிருந்தாரே? அவர் இன்றைக்கு ஆபீசுக்கே வரவில்லை. இனி மேல் திங்கட்கிழமைதான் வருவார்..."

"அதனாலே என்ன?.... நீ ஊருக்குப் போகிறபடி போ.... அடுத்த வாரம் வந்து படத்தைப் பார்த்து விமரிசனம் எழுதிக் கொள்ளேன்.... குடியா முழுகிப் போய் விடும் அதற்குள்ளே?..."

"அங்கேதான் சார், ஒரு சின்னச் சிக்கல். இந்த விமரிசனம் கட்டாயமாக இந்த 'இஷ்யூ'விலேயே வந்தாக வேண்டுமாம். மத்தியானம் 'எடிட்டர்' போன் செய்தார்."

"என்னப்பா இது, தர்மசங்கடமாகப் போய் விட்டதே!" என்று



அலுத்துக் கொண்டார் கோபாலசாமி. ஒரு நிமிட யோசனைக்குப் பிறகு, வேறு வழியின்றி, ''சரி, டிக்கெட்டைக் கொடு! ...'' என்று வாங்கிக் கொண்டார்.

ராகவனுக்குப் பரம சந்தோஷம். டிக்கெட்டைக் கொடுத்துவிட்டு, ''என் கல்யாணம் சீக்கிரமே நடக்க வேண்டுமென்று ஆசீர்வாதம் செய்யுங்கள் சார்!....'' என்று வேறு சொல்லிவிட்டுப் போனான்.

தலைப்பக்கத்தை ஒருவாறு எழுதிக் கொடுத்த போது கோபாலசாமிக்கு முழுத் திருப்தி இல்லைதான். 'சரி, புரூபில் திருத்தி 'இம்ப்ரூவ்' செய்து கொள்ளலாம்' என்று மனத்தைச் சமாதானப்படுத்திக் கொண்டு, படம் பார்க்கப் போனார். படம் ரொம்ப சுமார்.

இடைவேளைக்குச் சற்று முன்னதாக, கதாநாயகியின் நோஞ்சல் தந்தை, பார்வைக்குப் பட்டணத்துச் சோதாவைப் போல் தோற்றமளிக்கும் கதாநாயகனிடம் கதாநாயகியை ஒப்படைத்து விட்டு, ''இனி நீதான் அவளுக்கு எல்லாமும்....'' என்ற அரைத்த மா வசனத்தை மூச்சுத் திணறக் கூறி, 'லொக்கு லொக்' கென்று இருமிவிட்டு மண்டையைப்

போட்ட போதுதான் சுரீரென்று வேறொரு விஷயம் உறைத்தது கோபாலசாமிக்கு. அந்த வார இதழுக்கு அவர் இன்னொரு விஷயமும் எழுதியாக வேண்டும். நகரப் பிரமுகர்களில் ஒருவர் திடீரென்று காலமாகி விட்டார். அவரது மறைவு குறித்து வருத்தம் தெரிவித்து எழுதியாக வேண்டும்....

'எப்படி இந்த முக்கியமான விஷயத்தை மறந்து விட்டிருந்தோம்' என்ற கவனிப்பிலும், 'அவரைப் பற்றி என்ன எழுதலாம்' என்பது குறித்தும் கோபாலசாமி சிந்தனையை ஓடவிட்டிருந்ததால், இடைவேளைக்குப் பிறகு படத்தில் அவரது கவனம் செல்லவே இல்லை.

'அடடா!.... கதை இன்னதென்று கவனிக்காமல் போய்விட்டோமே' என்ற தாபம் எழுந்தது. அதைத் தீர்க்கப் பதினைந்து பைசா கொடுத்துப் பாட்டுப் புத்தகத்தை வாங்கிக் கொண்டு வெளியே வந்தார். பாட்டுப் புத்தகத்தைப் புரட்டிப் பார்வையைச் செலுத்தினார்.

என்ன துரதிர்ஷ்டம்!.... அந்தப் பாட்டுப் புத்தகத்தில் கதைச் சுருக்கமே இல்லை.

''இன்னும் ஒரு 'அவர்' தான் சார் இருக்கு. எது வந்தாலும் வராகாட்டியும் சரியா பன்னிரண்டு மணிக்கு 'மேட்டரை'க் குளோஸ் பண்ணிப்பிடுவோம்... அப்புறம் விமரிசனத்தை அடுத்த வாரம் வச்சுக்க வேண்டியதுதான்......'' என்று அவரை எச்சரிப்பது போல் சொல்லிவிட்டுப் போனான் போர்மேன் செல்வராஜ்.

கோபாலசாமி சுறுசுறுப்பாக இயங்கத் தொடங்கினார்.

சினிமா விமரிசனத்தைத் திருத்தி, பாரத்துக்கும் 'லட்டரைக்' போட்டுக் கொடுத்துவிட்டு வீட்டுக்குக் கிளம்பினார் கோபாலசாமி.

'பாரம்' ஓடி இறங்கி, அந்த வார இதழ் கூட வழக்கம் போல வெளியாகிவிட்டது. சாத்தனூர் போன சுந்தரேசனும் வரவில்லை ; திருச்சிக்குச் சென்ற ராகவனும் திரும்பவில்லை. 'சரி, இந்த வாரமும் 'ஜோலோ'தான் போயிருக்கிறது' என்று ஆதங்கப்பட்டுக் கொண்டே கோபாலசாமி அடுத்த இதழுக்கான வேலைகளில் மூழ்கியிருந்த போதுதான் 'நாபாம்' குண்டுக்கு எந்த விதத்திலும் சளைக்காத குண்டு ஒன்று அவர் தலையின்மீது விழுந்தது. 'கணகண'வென்று டெலிபோன் மணி ஒலித்தது. போனை எடுத்தார்.

''எனக்கு ஆசிரியரோடே பேசணும்!'' என்றது ஓர் அதிகாரக் குரல்.

''அவரோடு நீங்கள் நேரடியாகப் பேச முடியாது. என்னவாக இருந்தாலும் என்னிடம் சொல்லலாம்........'' என்று பதிலளித்தார் கோபாலசாமி.

''நீங்கள் யார்?.....''

''நான்தான் இங்கே பொறுப்பாசிரியர்.''

''என்ன சார், நீங்களாவது கொஞ்சம் பொறுப்போடு நடந்து கொள்ள வேண்டாமா?.... இப்படித் தப்பும் தவறுமா எழுதியிருக்காங்களே?......''

''என்ன எழுதியிருக்கிறார்கள்?..... யார் எழுதியிருக்கிறார்கள்?..... கொஞ்சம் விவரமாகச் சொன்னால் தேவலை....''

''எல்லாம் உங்க ஆளுங்கதான் சார். விமரிசனம் எழுதியிருக்காங்களே! நம்ம கஜேந்திரன் நடிப்பைப் பற்றிக் குறிப்பிடும் போது 'காலஞ்சென்ற நடிகர் சண்முகநாதனை நினைவுபடுத்தியது அவர் நடிப்பு'ன்னு எழுதியிருக்குதே!.......''

''ஆமாம்...... அதற்கு என்ன இப்போது?''

''அதற்கென்னவா?....பழம் பெரும் நடிகர் சண்முகநாதன் இன்னும் சாகல்லே சார். கல்லுக் குண்டாட்டம் உயிரோடுதான் இருக்கார். எழுபது வயசு ஆகியும்..... உயிரோட இருக்கிற ஒருத்தரைப் போய்ச் செத்துட்டார்னு எழுதிட்டு அதுக்கு என்னன்னு வேற கேட்கிறீங்களே?....''

ஒன்றரையங்குல ஆணியை உச்சந்தலையில் அறைந்தது போலிருந்தது கோபாலசாமிக்கு. நாக்கைக் கடித்துக் கொண்டார். இப்போப் பட்ட மகத்தானதொரு தவறு எப்படி நேர்ந்தது.....?

காலஞ்சென்ற பிரமுகரைப் பற்றி வருத்தம் தெரிவித்துவிட்டு, அதே மூச்சில் விமரிசனத்தையும் எழுதியதன் விளைவாகவோ, என்னவோ, 'காலஞ் சென்ற' என்ற வார்த்தை இங்கேயும் கனகச்சிதமாக விழுந்திருந்தது. தூக்கக் கலக்கத்தில் 'புரூப்' பார்த்ததால் இந்தத் தவறு மூளையில் உறைக்கவே இல்லை. மறு நாளாவது பாரத்தைப் படித்துப் பார்த்திருந்தாரானால் தவறு புலப்பட்டிருக்குமோ என்னவோ?

அன்றைக்கு முழுவதும் இருபத்தைந்து பேரோ என்னவோ போன் செய்தார்கள். 'என்ன சார், இப்படிப் போட்டு விட்டீர்களே?' என்ற ஒரே மாதிரியான புகார்.... மறு நாள் வந்து குவிந்ததை பார்க்க வேண்டும், 'ஆசிரியருக்குக் கடிதங்கள்' !

'எந்த நிமிடத்திலும் ஆசிரியரிடமிருந்து டெலிபோன் அழைப்பு வரும்' என்று எதிர்பார்த்து உதைப்புடன் காத்துக் கொண்டிருந்தார் கோபாலசாமி. ஆனால் 'எடிட்டர்' அன்றும் கூப்பிடவில்லை; அதற்கடுத்த நாளும் கூப்பிடவில்லை;

பத்திரிகை வெளிவந்த மூன்றாம் நாள் குழம்பிய மனத்துடன் ஒரு கதையை 'எடிட்' செய்து கொண்டிருக்கும் போது, டெலிபோன் ஒலித்தது. ''நான் நடிகர் சண்முகநாதனுடைய ரசிகனுங்க...'' என்று கட்டைக் குரலில் தொடங்கி, ''மன்னிப்புக் கேட்டு விடுங்கள் அடுத்த இதழிலேயே'' என்று கட்டளையிடும் ஆசாமி யாராவதாக இருக்கும் என்று எண்ணிக் கொண்டே, போனை எடுத்தார் கோபாலசாமி.

''ஹலோ!.... யார் சார், பேசறது அங்கே?.....'' என்று இனிமையாக ஒலித்தது ஒரு பெண் குரல்.

''நான்தான் உதவியாசிரியர் கோபாலசாமி பேசறேன்......''

''இந்த வாரம் சினிமா விமரிசனம் எழுதியது யார் சார்?......''

''ஏன்? அதைப் பற்றி உங்களுக்கென்ன?''

''இல்லே.... அவங்களைப் பார்க்கணும்னு எங்க தாத்தா ஆசைப்படுறாரு......''

''உங்க தாத்தாவா...... யார் அது?''

''ஓ! அதைச் சொல்லலியா நான்?....நீங்க எழுதியிருக்கீங்களே, காலஞ்சென்ற சண்முக நாதன்னு, அவர் தான்!......''

போயிற்று........ வசமாக மாட்டிக் கொண்டு விட்டோம்.... இவர் கேள்வி மேல் கேள்வியாகத் தொடுக்கப் போகிறார்.

''ஓ!.... நீங்களா சண்முகநாதன் உங்கள் தாத்தாவா?..... சரி, உங்கள் விலாசத்தைச் சொல்லுங்கள்; வந்து பார்க்கிறேன்....''

''அடடே!.... நீங்கதான் எங்க தாத்தாவைக் கொன்றவரா சார்?.... கட்டாயம் வாருங்கள், எனக்கும் உங்களைப் பார்க்கவேண்டும்போல ஆசையாக இருக்கிறது'' என்றவன் தன் வீட்டு விலாசத்தையும் சொன்னான்.

அங்கு போய்ச் சண்முகநாதனைச் சந்திப்பதற்குமுன் அடுத்த இதழில் தவறுக்கு வருத்தம் தெரிவித்து மன்னிப்புக் கேட்டும்ஆசிரியர் குறிப்பை எழுதி, அவசர அவசரமாக அச்சுக் கோத்து, ஒரு 'புரூப்'பும் போட்டுக் கொண்டு புறப்பட்டார் கோபாலசாமி.

எதிர்பார்த்துக் கற்பனை செய்து வைத்திருந்ததை விடப் பெரிய வீடாகவே காணப்பட்டது சண்முகநாதனுடையது. கோபாலசாமியை வாசலுக்கு வந்து வரவேற்ற பெண், ''ஏன் சார், அடுத்த வார இதழில் 'அதிசயம் ஆனால் உண்மை: இறந்தவர் உயிரோடிருக்கிறார்' என்ற தலைப்பில் போடுவீர்களோ தாத்தாவைப் பற்றிய செய்தியை?.....'' என்று கேலியாகக் கேட்டாள்..... வெறுமனே அசட்டுச் சிரிப்புச் சிரிப்பதைத் தவிர அவரால் வேறெதுவும் செய்ய முடியவில்லை.

எழுபது வயதாகியும் திடகாத்திரராகவே இருந்தார் சண்முகநாதன். கோபாலசாமியை வரவேற்று உட்காரச் செய்தார். சிறிது நேரம் மௌனம் நிலவியது இருவரிடையேயும். கோபாலசாமிக்கோ எப்படிப் பேச்சை ஆரம்பிப்பதென்றே தெரியவில்லை.

''உங்களிடம் கொஞ்சம் மனம் விட்டுப் பேச வேண்டும் என்பதற்காகத்தான் உங்களை அழைத்தேன்....'' என்று சண்முகநாதனே ஆரம்பித்தார்.

குரலுக்குக் கருதி கூட்டிக் கொண்டு, ''வந்து.... இந்த இதழிலே ஒரு பெரிய தவறு நிகழ்ந்து விட்டது. அதற்கு முழுப் பொறுப்பும் என்னுடையதுதான்.... மன்னித்துக் கொள்ளுங்கள். அடுத்த இதழிலே ஆசிரியர் குறிப்பு ஒன்றும் போடப் போகிறேன். இது சம்பந்தமாக....'' என்று நேரடியாக விஷயத்துக்கு வந்து விட்டார் கோபாலசாமி.

அவர் சற்றும் எதிர்பாராதவிதமாக, ''எனக்கு இன்றைய தேதியில் எவ்வளவு சொத்து இருக்கும் என்று நினைக்கிறீர்கள்?'' என்று சம்பந்தமில்லாமல் ஏதோ கேட்டார் சண்முகநாதன்.

கோபாலசாமி திணறினார், பதில் சொல்ல முடியாமல். அவரைப் பார்த்துக் கனிவு நிறைந்த புன்முறுவலைத் தவழவிட்ட சண்முகநாதன் மேலே தொடர்ந்தார் :

''பரவாயில்லே..... நானே சொல்கிறேன். மொத்தம் இருபது லட்ச ரூபாய்க்குச் சொத்து இருக்கிறது எனக்கு.... நடிகர்களிலே ரொம்பப் பேர் அவங்க சம்பாதிச்சதைச் சேர்த்து வைக்கல்லே; அதனாலே அவர்களுடைய அந்திய காலம் இருண்டதாகவும், பிறர் பார்த்து இரக்கப் படும்படியாகவும் ஆகிவிட்டதுங்கிற விஷயம் உங்களுக்கெல்லாம் தெரிந்திருக்கும்.... அப்படியெல்லாம் நமக்கு எதுவும் நேர்ந்து விடக் கூடாதென்று, நான் புத்திசாலித்தனமா சேர்த்து வைச்சேன். உம் அது இருக்கட்டும். நீங்க என்னை இறந்து போனதாக எழுதியதில் தவறு எதுவும்இல்லே.

''சினிமா உலகைப் பொறுத்த வரையிலே நான் காலம் சென்றவன்தான். என் காலமெல்லாம் ஆயிட்டுது.... இப்போ நடக்கிறது வேறொரு புதிய யுகம். இதைத்தான் நீங்க ரொம்ப அழகா, நாசுக்கா குறிப்பிட்டிருக்கீங்க... ஆனா ரொம்பப் பேருக்கு அதன் உள் அர்த்தம் புரியாது.... 'என்னப்பா இது, உயிரோட இருக்கிற ஒருத்தனை, செத்துட்டான்னு சொல்றியே'ன்னு சண்டைக்கு வருவாங்க இல்லையா?......''

'ஆமாம்' என்பது போலத் தலையசைத்தார் கோபாலசாமி.

''ஆனால் நீங்க செய்திருக்கிறதுதான் சரியான காரியம்.... என்னைக் காலம் சென்றவர்னு குறிப்பிட்டிருந்ததுதான் எனக்கு ரொம்பப் பிடித்திருந்தது.... அதற்குப் பாராட்டுத் தெரிவிக்கத்தான் உங்களை அழைத்தேன்!.......''

''அப்படியென்றால் அடுத்த வார இதழில் மன்னிப்பு.....''

''அதெல்லாம் ஒன்றும் வேண்டாம். தூக்கிப் போடுங்கள் அதைக் குப்பைத் தொட்டியிலே!.... நியாயமாகப் பார்க்கப் போனால், காலம் சென்ற பிறகும் எதையோ பெரிதாகச் சாதிக்கப் போகிறவனைப் போல் உயிரைப் பிடித்துக் கொண்டு வாழ்ந்து கொண்டிருக்கிற நான்தான் எல்லோரிடமும் மன்னிப்புக் கேட்டாக வேண்டும்!....'' என்று சொல்லி, வாய்விட்டுச் சிரித்தார் சண்முகநாதன். அந்தச் சிரிப்பிலே கள்ளம் இல்லை; கவடு இல்லை; வெள்ளை உள்ளத்தின் பிரதிபலிப்பு மட்டுமே அதில் இருந்தது. கோபாலசாமியின் மனத்தில் பதுங்கியிருந்த பய மென்னும் பேயை விரட்டியடிக்கும் சங்கொலியாக அந்தச் சிரிப்பு முழங்கியது.

## எங்கே உங்கள் தம்பின் ?



செம்படவர்கள் என்று சொல்கிறோமே அவர்கள் யார் தெரியுமா? சிவபெருமானுக்கும் பணிபுரிபவர்கள் தான். 'படர்' என்றால் தொண்டு செய்பவர். சிவன் படர் என்றால் சிவனுக்குத் தொண்டுசெய்பவர் என்று பொருள். சிவன்படர் என்பதே நாளடைவில் செம்படர் என்று குறைந்தது. தண்ணீர் என்பது தண்ணி எனக் குறைவில்லையா? நமக்குப் பின் வருபவர் தம்பின் எனப்படுவர். தம்பின் என்றால் நமக்குப் பின் என்று பொருள். 'எங்கே உங்கள் தம்பின்?' என்றால் உங்களுக்கும் புரியாமல் விழிப்பீர்கள். தம்பி என்று சொன்னால்தானே தெரிகிறது ? எனவே தம்பின் என்பதே தம்பி எனக் குறைந்தது.

தகவல்: குற்றாலம் வி. சம்பந்தன்.




- தில்லி வானொலியும் கர்நாடக இசையும்
- பிரிட்டிஷ் ஆட்சியிலும் நடவாதது!
- காற்றில் பறந்தது!

காலை 6 மணியிலிருந்து இரவு 12 மணி வரை தொடர்ச்சியாக ஒலிபரப்புச் செய்யும் தில்லி வானொலி நிலையத்தில் தினந்தோறும் கணிசமான காலத்துக்குக் கர்நாடக சங்கீத ஒலிபரப்புக்கள் செய்வது மிகவும் அவசியமாகும். சில காரணங்களைக் குறிப்பிடுகிறேன்.

1. கர்நாடக சங்கீத வாய்ப்பாட்டிலும், வாத்திய இசையிலும் முழுநேரத் தொழிலாகவோ, பொழுது போக்காகவோ கொண்ட திறமைசாலிகள் சுமார் 150 பேர் தில்லியில் உள்ளனர். இவர்களுக்கு ஊக்கமளிக்க வேண்டும்.

2. ஏறக்குறைய தினந்தோறும் வெளிநாட்டு ஒலிபரப்புக்களில் தமிழ் நிகழ்ச்சி இடம் பெற்ற காலத்தில் இதன் பயனை அடைந்தவர்கள் இன்று மனத் தளர்ச்சி கொண்டிருக்கிறார்கள். இவர்களை மீண்டும் ஊக்க வேண்டும்.

3. தில்லியில் ஏறக்குறைய லட்சம் தென்னிந்தியர்கள் உள்ளனர். இவர்களில் பெரும்பாலோர் கர்நாடக சங்கீத ரசிகர்கள். தற்போது ஹைதராபாத் தவிர மற்ற எந்தத் தென்னிந்திய நிலையங்களின் ஒலிபரப்பையும் இவர்கள் சரியாகக் கேட்க முடிவதில்லை. எனவே, தில்லி வானொலியிலேயே கர்நாடக இசைக்கு முக்கியம் அளிக்க வேண்டியது நியாயம்.

4. சாஸ்திரீயமான கர்நாடக சங்கீதத்தைத் தென்னிந்தியர் கேட்குமளவுக்கு, சாஸ்திரீய ஹிந்துஸ்தானி சங்கீதத்தை வட இந்தியர் கேட்பதில்லை எனலாம். சாஸ்திரீய சங்கீதத்தைப் பற்றிய மட்டில் இசைதான் முக்கியமே அன்றி மொழி அல்ல. மேலும் மொழி அடிப்படையில் பார்த்தாலும் பல பிரதேச நிலையங்களும் பலவேறு மொழி இசையை ஒலிபரப்புகின்றன. தலைநகரமான தில்லி, குறிப்பிட்ட ஒரு மொழிக்கு அப்பாற்பட்ட, பொதுவான ஸ்தலம். எனவே, தில்லியில் ஒலிபரப்பப்படும் சாஸ்திரீய நிகழ்ச்சிகளுக்கான இந்திய இசை முறைகளில் இரண்டிலொன்றான கர்நாடக சங்கீதம் சரிபாதியைப் பெறுவதும் நியாயமே.

கர்நாடக சங்கீத ஒலிபரப்புகளைத் தில்லியில் தினந்தோறும் செய்வதால், மிகவும் பேசப்பட்டு வரும் தேசிய ஒருமைப்பாட்டுக்கும் உதவி செய்வதாகும்.

அகில இந்திய வானொலி இந்த அம்சங்களைக் கருத்தில் கொள்ளவேண்டும், நடைமுறைக்கும் கொண்டு வரவேண்டும் என வேண்டுகிறேன்.

புதுதில்லி
11–5–66 ஆர். பொன்னுசுவாமி

நமது மாநிலத்தில் மத்திய சர்க்காரின் ஆதரவின் கீழ் நடத்தப்படும் ஆதர்ச சென்டிரல் ஸ்கூல் என்கிற பள்ளிகளில் ஹிந்தியும் ஆங்கிலமும் கட்டாயமாகக் கற்பிக்கப்படுகின்றன. தமிழ் கற்பிக்கப்படுவதில்லை. இவ்விதம் அகில இந்திய அடிப்படையில் இரண்டு மொழிகள் சின்னஞ் சிறிய மாணவர்கள் மேல் சுமத்தப்படுவதும், தாய்மொழி புறக்கணிக்கப்படுவதும், பிரிட்டிஷ் ஆட்சியில்கூட நடந்தது கிடையாது. அந்த அந்த மாநிலங்களில் அந்த அந்தப் பிராந்திய மொழிகளையும் கற்பிப்பதுதான் நியாயம். நமது மாநிலப் பள்ளிகளில் தமிழும் ஆங்கிலமும் கட்டாயமாகவும், ஹிந்தி விருப்பப் பாடமாகவும் கற்பிப்பதே நியாயமாகும்.

சென்னை
20–5–66 கே. விசாலம்

இதழுக்கிதழ் சிறப்புடன் விளங்கும் 'டயல் ஒன் நாட் நாட்'டைப் படிக்கும் போது அளவிட முடியாத மகிழ்ச்சி உண்டாகிறது.

சிறப்புச் சிறுகதைக்கு ஒப்பாக அமைந்துள்ள அட்டைப் படக் கதை 'ஒரே சொல், ஒரே பாணம்' என்ற கதைக்கு ஒரு சொல்லில் பாராட்ட வார்த்தைகள் போதா!

கான்பூர்
20–5–66 நந்தி நடராஜன்

பம்பாய் காங்கிரஸ் மாநாட்டில் பெரிய அங்கத்தினர் பலர், ''ஆங்கிலம் இனி நீடிப்பது அவமானம்; அடிமைச் சின்னம்'' என்றெல்லாம் பேசியுள்ளனர். உதவிக்குக் கையேந்துவது அவமானமில்லை ; அவர்கள் மொழியைப் பேசுவதுதான் அவமானமா? நேருஜி இந்தி பேசாத மக்களுக்கு அளித்த வாக்கைக் காற்றில் பறக்க விட்டனர். ஆட்சியாளர்களில் சிலர் வெகு திறமையாக, ஆங்கிலத்தால் பிராந்திய மொழிகளுக்கு ஆபத்து என்று பேசுகிறார்கள். இது முழுப் பொய். துரதிர்ஷ்டவசமாக சில எதிர்க்கட்சித் தலைவர்களும் ஆங்கிலத்தை எதிர்க்கிறார்கள். ஆங்கிலமும் பிராந்திய மொழிகளும் போனாலும் வெற்றி இந்தி வெறியர்களுக்குத்தான். இதை மக்கள் நினைவிலிருத்த வேண்டும்.

திருவள்ளூர்
23–5–66 இரா. தமிழ்மகன்

Edited printed & published by T. Sadasivam on behalf of Messrs. Bharathar Publications Private Ltd., at the Kalki Press, Kilpauk, Madras-10



# நற்காப்பான சேமிப்பு விரைவில் அவள் கைக்கெட்டும்

இன்றே சேமிக்கப் பழக்குங்கள் உங்கள் குழந்தையை. ஸ்டேட் பாங்க ஆப் இந்தியாவிலே அவளுக்கென ஒரு சேமிப்பு பாங்குக் கணக்கைத் துவக்குங்கள். தன் சேமிப்பு வளருவதைக் காணப் பெரிதும் விரும்புவாள் அவள்.

செக் வசதி கொண்ட, மைனர்களின் சேமிப்பு பாங்குக் கணக்குகளைப் பின்வருவோர் துவக்க முடியும்:

(அ) இயல்பான பராமரிப்பாளர், அல்லது நீதிமன்றத்திலும் நியமனம் பெற்று, மைனர் மேஜராகும் வரை அக் கணக்கை இயக்கும் பராமரிப்பாளர்; மேஜரானதும் அம்மைனரே கணக்கை இயக்குவார்.

(ஆ) 14 வயதோ அதற்கு மேலோ உள்ள சிறுவர்கள் தாமாகவே பணம் போடவும் எடுக்கவும் செய்யலாம்.

## சேவை புரிவதற்கே ஸ்டேட் பாங்க்

LFE Aiyars. S. 147 TM

